அவர் ஶிரஸஸை ஸ்பாஶித்துக்கொண்டு ஸதாசார்யரான ஆளவந்தார திருவடிகளை ஸமரித்துக்கொண்டு குருபரம் பரா பூர்வகமாக மந்தரரத்நமான த்வயத்தை ஸாங்கோ₃பாங்க₃மாக இளையாழவாருடைய வலத்திருச்செவியிலே உபதேசித்தருளி, 'பெருமாள் நாட்டுககாக ஸ்ரீபரதாழவான தலையிலே திருவடிநிலைகளை வைத்துக காட்டுககு எழுந் தருளினபோலே ஆளவந்தாரும் உமககாகத தமமுடைய திருவடித தாமரைகளை என்தலைமேலே வைத்துத திரு நாட்டுக்கு எழுந்தருளினரென றிருங்கிடீர்' என்று இளை யாழ்வாருக்கு அருளிச்செயதருளினர். ஆளவந்தாருககுக் கரணபூ₄தரிறே பெரியநம்பி. இளையாழவார்கரு நேரே ஆசார்யர் யமுனைத்துறைவரேயாம். ஆகையாலேயிறே, "எதிகட்கிறைவன யமுனைத்துறைவனிணையடியாங கதி பெற்றுடைய விராமாநுசன்" என்று பிள்ளையமுதனார் அருளிச் செய்ததும்.

இளையாழவாரும் 'ப்ரமாணம எது? பரமேயம எது? ப்ரமாதாககள ஆர்? என்று பெரியநம்பியைககேடக அவரும் "மாதவன பேர சொலலுவதே ஓத்தின சுருககு" என்கிறபடியே பரமாணமும த்வயமே, பரமேயமும இத் தால பரதிபாதயனுய் ஸ்ரீஹஸதிகிரியின மேலே கையுந் திருவாழியுமாய் நிற்கிற பெருமாளே, ப்ரமாதா நீர்தாம; இந்த பரமாணததாலே ப்ரமேயததை அநுபவிகக வாரும்' என்று அருளிச்செயது, அதின்மறறைநாள் புறபபட்டு ஏரிகாத்தபெருமாளைத திருவடிதொழுது '307. "ஸ ராமோ லோகரஞ்ஜந' என்னுமாபோலே தேவரீர திருநாமத துககுத தகுதியாக இததர்ஶநம ப்₄ரவர்த்தகமாகாதபடி செய்தருளிறறே" என்று மங்களாஶாஸநம் பண்ணியருளிப் பெருமாள் மேசையிலேற வெழுந்தருள திருககச்சிநம்பியும் எதிரேவந்து பெரியநம்பியை ஸேவிக்க, அவரையும கருடை பணணி அவா புருஷகாரமாக * உலகேத்து மாழியானத

திபூராஞன பேரருளாளனேயும் ஸேவிதது. நாதமுனிசள் உயயகொண்டாருககு அருளிசசெய்தபடியை உயயக கொணடார் நியோகததால மணககாலநமபி ஆளவநதா ருககுப் பச்சையிட்டு உபதேசிததுக கோயிலிலே கொணடு போய்ப பெரியபெருமாளே ஸாக்ஷாதகரிப்பித்து அனுப விப்பிததாபபோலே பெரியநமபியும் ஆளவநதார்நியோகாத பலகால தட்டி யுபதேசிததுப் பேரருளாளப் பெருமாளே ஸாக்ஷாதகரிபபித்து அநுபவிபபிததருளிஞா.

அநந்தரம் இளேயாழ்வாா திருமாளிகையிலே எழுந் தருளி, தம் திருமாளிகையிலே மேலபாதியிலே பெரியநமபி குடும்பஸஹிதமாக எழுநதருளி யிருககததககதாக இடம ஸமர்ப்பிததுத தளிகைககு வேண்டும பதார்த்தஙகளும ஸமாபபிகக,நமபியும ஆறுமாஸம அஙகேஎழுந்தருளியிருநது இளேயாழவாருககு த்₃ராவிட₃வேத₃ பரப₃நத₄ங்களேயும், த₃ா ரநவிஷயரஹஸ்யவிஶேஷங்களேயும் ப்ரஸாதிகக இளே யாழவாரும் பரீதியுடனே * செவிக்கினிய செஞ் சொல கேட்டு கருதாாததராயிருககுங்காலததிலே, ஒருநாள் திரு மஞ்சநமுறையிலே எண்ணெயககாபபுச சாததவநத ஸ்ரீவைஷணவர் க்ஷுததது நலியாநினறது' எனறவாறே, இளேயாழவாரும தம்தேவிகளே யழைதது 'ஸ்ரீவைஷ்ணவர் விடாய்ததிருககிறுா, பர்யுஷிதாநநம இலலேயோ?' எனன, தேவிகளும 'அலபமாகிலு மிலலே' எனன, இவரும தேவிகளே ஒருகாாயத்திலே ஏவிவிட்டு உள்ளே புகுநது ஶோதித் தருளிப பாதரததிலே பழையபரஸாதம ஸமருததமா யிருக்கக கண்டெடுததுத தேவியாரையழைத்து 'ஸ்ரீவைஷண வர் இளததிருகக இப்படிசெய்தாயீ! * இடும்பையாலடர்ப புண்டு இடுமினேதுறறெனறிரந்தவர்க்கு இலலேயெனறு நெடுஞ்சொலலால மறுத்த நீசையிறே நீ' எனறு கநக்கக் கோபித்துவிட்டார். பினனேயும் ஒருநாள் கிணறறினகரை யிலே இளேயாழவாாதேவிகளுககும பெரியநமபிதேவிகளுக கும ஒருதோண்டிவ்யாஜமாகச் சண்டையானவளவிலே,

இதனைப் பெரியநம்பி கேட்டருளித் தம்முடைய தேவிகளை மிகவுங்கோபித்து இளையாழ்வாருக்கும் அறிவியாதே தேவிகளையழைத்துக்கொண்டு மீண்டு கோயிலுக்கு எழுந்தருளினார். இளையாழ்வாரும் அநுஷ்டானம்பண்ணியெழுந்தருளிப் பெரியநம்பியை ஸேவிக்கப்பெறாமல் திருமாளிகையில் வர்த்திக்கிறவர்களை 'பெரியநம்பி எங்கே?' என்று கேட்டருள. 'மீண்டு கோயிலுக்கு எழுந்தருளினார்' என்று அவர்கள் விண்ணப்பஞ்செய்ய. இவரும் 'அதுவென்? அவர் அருளிச்செய்யாமல் எழுந்தருளுகைக்கு ஹேதுவென்?' என்ன. 'ஒரு தோண்டியடியாக மதனியாருக்கும் மதனியாருக்கும் சண்டையானவாறே தம் தேவிகளைக்கோபித்து பாகவதாபசாரத்துக்கு இறாய்த்து அப்போதே கோயிலேற எழுந்தருளினார்' என்றார்கள்.

இளையாழ்வாரும் அச்செய்தியைக்கேட்டு திருவுள்ளங் கலங்கித் தேவிகளைப்பார்த்து அதிகுபிதராய் 308. "பாபாநாமாகரஸ்ஸ்த்ரிய" என்னும்படியை ஸ்பஷ்டமாக்கினாயே! முன்பே திருக்கச்சிநம்பிவிஷயமாகவும், ஸ்ரீவைஷ்ணவா விஷயமாகவும் பாகவதாபசாரப்பட்டாய், இப்போதும் பெரியநம்பி தேவிகளுடனே பிணங்கி அஸஹ்யாபசாரப்பட்டாய, இப்படி செய்கிற நீ இப்பொழுதே புறப்பட்டுப் போ என்று தத₃நுப₃ந்தி₄யான த₄நங்களையுங்கொடுத்துப் பயணமாக்கிப் பிறந்தகமேபோகவிட்டு, "இல்லறமல்லேல் துறவறம்" என்கிறபடியே 'அதிதி₂ஸத்கார்யோக₃்யையன்றிக்கே ப்ரதிகூலையாயிருக்கிற ப₄ார்யையை ஸவாஸநமாக த்யஜித்து ஸந்யஸிக்கக்கடவன்' என்கையாலே இளையாழ்வாரும், 'நமக்கு இஸ்ஸம்ஸாரம் த்யாஜ்யம்' என்று அத்₄யவஸித்து 309. "அநந்தஸரஸி ஸ்நாத்வா விமானச் † சா₂யயாஸ்ரிதே। விமுக்தஸ்ஸர்வபாபேப்₄யோ விஷ்ணுலோகம் ஸ க₃ச்சதி ||" என்னும் மாஹாத்ம்யமுடைய திருவ

---

† 'சா₂யயாஞ்சிதே' என்று பாடபேதம்.

நந்த ஸரஸ்ஸுக்கு எழுந்தருளி 310. "ஸம்யங் ந்யாஸ$_3$ஸாஹ்வயே தீர்த்தே$_2$ விக$_3$ாஹ்ய க$_3$தகில்பி$_3$ஷ. । நிரஸ்தே தரபே$_4$ாக$_3$ரோ வரத$_3$ம் ஶரணங்க$_3$த ॥' எனகிறபடியே திருவனந்தஸரஸ்ஸிலே நீராடி. 311 "யதே$_2$ாக்தகாரிணம் பி$_4$க்ஷும் ப$_4$க$_3$வந்தம் வா குருத்$_3$வேநாங்கீ$_3$க்ருத்ய ஸந்யாஸாஶ்ரமமாஶ்ர யிஷ்யாமி' என்கிறபடியே ஸந்யஸிக்க ஸங்கல்பித்துக் கொண்டு * தொழுதெழுதொண்டர்கள் தமக்குப்பிணி யொழித்தமரர் பெருவிசும்பருளும் பேரருளாளாஸந்நிதி யிலே எழுந்தருளி ஸேவித்து. "தாயே தந்தையென்றும் தாரமே கிளைமக்களென்றும், நோயே பட்டொழிந்தேன்" என்கிறபடியே பக$_3$வத்ப$_4$ாக$_3$வதாசார்யானுவாத்தந்தத்துக்கு விலக்கடியான இஸ்ஸம்ஸாரஸம்பந்தம் வேண்டுவதில்லை, அடியேனுக்கு தேவரீர் திருவடித்தாமரைகளின் ஸேவையே வேண்டுவது, ஆகையாலே. 312. "த்ரித$_3$ண்ட$_3$ம் வைஷ்ணவம் லிங்க$_3$ம் விப்ராணும் முக்திஸாத$_4$நம் । நிமாணம் ஸர்வ த$_4$ர்மாணுமிதி வேத$_3$ானுஶாஸநம்॥" என்று இப்படி சொல்லப் பட்ட த்ரித$_3$ண்ட$_3$காஷாயாதி$_3$களை தேவரீர் அடியேனுக்கு ப்ரஸாதித்தருளவேணும்' என்று இளையாழ்வார் பேரருளாளரை ஆசார்யத்வேந அங்கீகரித்து விண்ணப்பஞ்செய்ய, தேவப்பெருமாளும் திருவுள்ளமுகந்தருளி 313. "'த்ரித$_3$ண்ட$_3$ முபவீதஞ்ச வாஸ: கௌபீநவேஷ்டநம் । ஶிக்யஞ்சவசமித யேதத்$_3$ பி$_3$ப$_4$ருயாத$_3$யாவத$_3$ாயுஷம்॥" என்கிறபடியே த்ரி தண்டகாஷாயாதிகளை நீருள்ளதனையும் தரிக்கக்கடவீர்" என்று அர்ச்சகமுகே$_2$ந நியமித்து ப்ரஸாதித்தருளி 'இராமானுசமுனி' என்று திருநாமஞ்சாத்தியுகந்தருளி, 'நம்மிராமானுசனை மடத்திலே வைத்துவாரும்' என்று திருக்கச்சி நம்பிக்கு அருளிச்செய்தருள, அவரும் அப்படியே உபலாளித்துக்கொண்டுபோய் மடத்திலே வைத்து எழுந்தருளினர்.

பின்பு ராமானுசனும் ஆஶ்ரமதர்மங்களைக் குறைவற நடத்திக்கொண்டு 'நமக்கு ஆளவந்தார் விஶேஷகடாக்ஷம்

பண்ணினதற்கு ஈடாக விரோதிகளும் கழிந்து ஆநுகூல்யமும கூடாநின்றதே; ஆளவந்தார் திருவுள்ளக்கருத்து நிறைவேறும்படி நமக்கு ஒரு ஸஹாயம உண்டாகவேணும்' என்று விசாரமுண்டாய்த் தத்$_3$நுரோதே$_4$ந கோ$_3$விந்த$_3$ பட்டரை நினைத்து 'அவன் நமக்கு ஹிதபரவர்த்தகன; ஸர்வவிஷயவிரக்தன, ராஸ்தரவைத$_3$க$_3$த்$_4$யமுள்ளவன்: இனி அவனை நம்மோடே சேர்ப்பாருண்டாகில் நல்லது, இப்போது அவன் தேவதாந்தரபரனுயிராநின்றான், அவ்வுள்ளங்கை கொணர்ந்த இடத்தே சுருள்நாற்றமெழுப்பி 314. "ஸர்வக$_3$ந்த$_4$ஸ ஸர்வரஸ.' என்னுமவனுடைய ஸௌக$_3$ந்த$_4$யத்தைக் காட்டி மீட்கும் விரகர் ஆரோ?' என்று நினைவிட, 'விசேஷோத்தமகுணங்களையுடையராய் வேத$_3$ வேதாந்தவித$_3$க$_3$ரேஸரராய வகுளாப$_4$ரணப்ரப$_3$ந்த$_4$முகுளாமோதி$_3$தசித்தராய் '* நிலத்தேவர்க்காய் நின்ற திருவேங்கடத்தெம்பெருமானை அநவரதப$_4$ாவனைபண்ணிப் * பிரியாவடிமை செய்யாநின்றுள்ள தே$_3$சிகாக்$_3$ரேஸரரான பெரிய திருமலைநம்பி கடவர் என்று நிஶ்சயித்து, ஒரு அநுகூல ஸ்ரீவைஷ்ணவரை அவர் ஸந்நிதிக்குப்போகச் சொல்லி 'தேவரீருடைய மருமகனை வட்டமணி கோவிந்தபட்டன அடியேனுடன் ஸஹாத$_4$யாயியாய் அநுகூலித்திருந்தவன். துர்வாஸநாதிஶயத்தாலே அந்யபரனுயக் காளஹஸ்தியாகிற சுடுங்காட்டிலே நிலவாநின்றான், தேவரீர் அடியேனுக்காக அவனிடத்தே நிர்ஹேதுககருபை பண்ணி தேவரீர திருவடிகளுக்கு அவனை ஆட்கொண்டருளவேணும்' என்று விண்ணப்பஞ்செய்துபோகவிட்டருளினர்.

## கூரத்தாழ்வானும் முதலியாண்டானும் இளையாழ்வாரிடம் ஆச்ரயித்தல்

அநந்தரம இவர் இப்படி ஆஶ்ரமப்ராபதிபண்ணியருளின செய்தியைக்கந்தாடை முதலியாண்டானும், ஹாரீத குலதிலகரான திருமறுமார்ப னென்கிற திருநாமத்தை

யுடைய கூரத்தாழ்வானும் கேட்டருளி, அதிப்ரீதியோடே பெருமாள் கோயிலுக்கு எழுந்தருளி ராமானுசனை ஸேவித்து 'அடியோங்களுக்குப் பஞ்சஸம்ஸ்காராதி$_3$களை ப்ரஸாதித்தருளவேணும்' என்று விண்ணப்பஞ்செய்ய, ராமானுஜனும் திருவுள்ளமுகந்தருளி அவர்கள் ப்ரார்த்தித்தபடியே செய்தருள, அவர்களும் பஞ்சஸம்ஸ்காராதிகளை லபி$_4$த்து க்ருதார்த்த$_2$ர்களாய் 315. "அதீ$_4$த்ய மந்த்ரமாசார்யம் பூஜயேச்ச$_2$க்திதோ த$_3$விஜ: | ஆசார்யாதீ$_4$நவ்ருத்திஸ் ஸ்யாவஜ்ஜீவம் ஸதா$_3$ ஶுசி: ||" என்கிறபடியே ஸ்வாசார்யரான ராமானுஜனை ஒருகாலும் பிரியாமல் தத்கைங்கர்ய பரராய் ஸேவித்துக்கொண்டிருந்தார்கள்.

## யாதவப்ரகாசன் இளையாழ்வாரை ஆச்ரயித்து உஜ்ஜீவித்தல்

பின்பு யாதவப்ரகாசனுடைய மாதாவுக்குப் பலகாலும் பேரருளாளர் ஸேவையும் திருக்கச்சிநம்பி பார்வையும் ராமானுஜனிடத்தே ப்ரேமஸம்பூ$_4$ர்ணமும் நடக்கையாலே அதுவே நிதா$_3$நமாக அவளுக்கும் நம த$_3$ர்ஶநத்திலே ஊற்றம் பிறந்து 'இத்தர்ஶநத்திலே நம்யாதவனும் இறங்கினாலோ!' என்று நினைத்து வையமாளிகைப்படி ஏறுகிற, 'நல்லது நல்லது' என்று கிம்வத$_3$ந்தியுண்டாக, அதுகேட்டு ஸந்தோஷத்துடனே யாதவப்ரகாசன் பக்கல் சென்று இச்செய்தியைச்சொல்லி 'நீயும் ராமானுசனைப்போலே ஶிகா$_2$யஜ்ஞோபவீதபூர்வகமாக த்ரித$_3$ண்டத்தைத் தரியாய்' என்ன யாதவப்ரகாசனும் ஸ்வமதாபி$_4$மாநத்தாலே அதத$_2$ஞ் சொல்லுகையொழிந்து பாரமார்த்தி$_2$கத்யா ஸ்வாபி$_4$மதார்த்தத்தில் அருசி தோன்றுகிறகையாலும், இளையாழ்வார் அந்நாளகளிலே ப்ரதியோகி$_3$த்தவோ சொன்ன அர்த்தங்கள் நெஞ்சிலே புண்படுத்தா நிற்கையாலும், அவர் மாஹாத்ம்யங்களை ப்ரஹ்மரக்ஷஸ்ஸு சொல்லியிருக்கையாலும், அவருக்குக் கங்காயாத்ரையிலே வ்யாத$_4$ருபேண வந்த ராம

ஸாக்ஷாத்காரஹாஸ்யத்தாலும், மாத்ருவாக்யத்தாலும் ஸம மதித்து, ஸ்வமாதாவுடனே 'த்ரிதண்டதாரணம்பண்ணு மிடத்தில் நான் ஷிகாயஜ்ஞோபவீதத்யாகம் பண்ணுகையாலே அதுக்கு ப்ராயஶ்சித்தமாக பூப்ரதக்ஷிணம் பண்ண வேண்டியிருக்கது; அதுவயோவருத்தனான என்னாலே செய்ய முடியாது, இனி அஸ்கத்தனான நான் செய்ய அடுப்பதென்?' என்று சொல்லி முசித்துக்கிடக்க. அவ்விரவிலே பேரருளாளர் அவன் ஸ்வப்நத்திலே யெழுந்தருளி 'நம்மிராமானுசனை ஒரு ப்ரதக்ஷிணம்பண்ணி அவர் தர த்ரிதண்டகாஷாயாதிகளைத் தரித்து ஸந்யஸியாய்' என்ன. யாதவனும் அதனை விஸ்வஸியாமல் திருக்கச்சி நம்பியுடனே 'நான் ஒருநினைவு நினைத்திராநின்றேன், அதனைப் பேரருளாளர்க்கு விண்ணப்பஞ்செய்து அவர் திருவுள்ளமானபடியை எனக்கு அருளிச் செய்யவேணும்' என்ன. நம்பியும் அன்று ராத்ரி பெருமாளை ஸேவித்து விடைகொள்ளுகிறவளவிலே 'யாதவப்ரகாசன் ஒருநினைவு நினைத்திருந்தேனென்றான்' என்று விண்ணப்பஞ் செய்ய. பேரருளாளரும் 'அவன் தாயார் இராமானுசனைப் போலே நீயும் த்ரிதண்டஸந்யாஸியாகாயென்றாள்; தான் பூப்ரதக்ஷிணம் பண்ணவேணுமென்று முசித்துக்கிடந்தான், நாம நம்மிராமானுசனை ஒரு ப்ரதக்ஷிணம்பண்ணி ஸந்யஸியாயென்று சொன்னோம், நாம ஸ்வப்நமுகேந சொன்ன வார்த்தையை விஸ்வஸியாமல் உம்மையிட்டுவித்துக் கேட்கிறானித்தனை' என்று அருளிச்செய்ய. நம்பியும் இச்செய்தியை விடிவோரை யாதவப்ரகாசனுக்கு அருளிச்செய்ய. அவனும் விஸ்வஸித்து வந்து ராமானுசன் திருவடிகளிலே தண்டன ஸமர்ப்பித்து 'அடியேனுக்கு த்ரிதண்டதாரணம் பண்ணுவித்தருளவேணும்' என்ன, இவரும் அவனுடைய உசித நிர்வேதத்தைக் கண்டு 'அதுசெய்யுமிடத்து ப்ராயஶ்சித்தாபேக்ஷையுண்டு' என்ன. அவனும் பகவதுக்தப்ரகாரத்தை விண்ணப்பஞ்செய்து அவர் தம்மையே வலம்வந்து ஸவிநயனாய் நிற்க. அவ்வளவிலே ஆழ்வானும் ஆண்டானும் , பகவதானுகூல்யமும் இவருடைய நினைவும் ஒத்திருந்த

படியே!' என்று விஸ்மிதராய், 316. "த்$_3$வேஷாச்சைத்$_2$த்$_3$யாத$_3$ய" என்கிறபடியே தேவரீர்கருப்பண்ணுகின்ற த்வேஷந்தானே இவருக்கு உஜ்ஜீவநஹேதுவாய்த்து' என்று சொல்லி ஆசாரியப்பட்டு 317. "அஸமாபி$_4$ஸ்துலயோ ப$_4$வது" என்று விண்ணப்பஞ்செய்ய, ராமாநுசனும் போரவுகந்தருளி ஶாஸ்த்ரோக்தப்ரகாரேண ப்ராயஶ்சித்தபூர்வகமாகச் சௌளோபநயநாதிகளையும் பண்ணுவித்து த்ரிதண்டகாஷாயாதிகளையும் ப்ரஸாதித்து 'கோவிந்தசீயர்' என்று திருநாமமும் ப்ரஸாதித்தருளி, இப்படி பஞ்சஸம்ஸ்காரயுக்தராக்கி குருபரம்பரா பூர்வகமாக மந்த்ரரத்நார்த்தத்தையும் ப்ரஸாதித்தருளி 'ஶாஸ்த்ரங்களிலே இதரேதரவசநவையர்த்$_2$த்யம் வாராதபடி 'யதிதர்$_4$மஸமுச்சயம்' என்கிற ப்ரபந்தத்தைப் பண்ணும்' என்ன, கோவிந்தசீயரும், 318. "விதி$_4$: காதருத$_3$ஶாலிங்க$_3$ம ப்ரயோகே$_3$ா முக$_2$யகாம ச| அஹோராத்ரக்ரியாSSசாரோ லிங்க$_3$த$_4$ர்மோ க$_3$திஸ்தி$_2$தி || ப்ராயஶ்சித்தாநி ஸம்ஸ்கார இத்யேகாத$_3$ஶ பாவக.||" என்று ஏவம்ப்ரகாரேண ஸங்க்ரஹப்ரபந்தத்தைச்செய்து ஸந்நிதியிலேவைத்துத்தண்டன் ஸமர்ப்பிக்க, ராமாநுசனும் ஆத்$_3$யந்தமாகத் திருக்கண் சாத்தி ஸந்தோஷித்தருள, இவரும் ஆசார்யபரதந்த்ரராய்ச் சிலகாலம் எழுந்தருளியிருந்து, அசிரேண பரமபதத்தை ப்ராபித்தருளினார்.

அநந்தரம் ராமாநுசனும், கூரத்தாழ்வானுக்கும் முதலியாண்டானுக்கும் மீமாம்ஸாஶாஸ்த்ரயுக$_3$ம்ஶ்ரமம் பண்ணுவித்துக்கொண்டிராநிற்க, இவருடைய ஆஶ்ரமபராபத்தி முதலான இச்செய்திகளைக் கோயிலிலே ஆளவந்தார் ஸ்ரீபாதத்து முதலிகளெல்லாரும் கேட்டுப் போரவுகந்து, தங்களிலே விசாரித்துக்கொண்டு நம்பெருமாள் ஸந்நிதியிலே சென்று 'இளையாழ்வாரை தேவரீர் ஸந்நிதியிலே நித்யவாஸம் பண்ணும்படி இங்கே அழைப்பித்துக்கொண்டருளவேணும்' என்று விண்ணப்பஞ்செய்ய, பெரியபெருமாளும் பேரரு

ளாளர்கு அப்போதே திருமுகம் போகவிட்டருள. பேரரு ளாளரும் கேட்டருளி, 'தந்தம் அபிமானத்தைப் புறம்பே போகவிடிலன்றோ நாம் நமபிராமாநுசனை விடுவது' என்று அருளிச்செய்துவிட, இச்செய்தியைக கோயிலிலே பெரிய நமபிமுதலான முதலிகளெலலாருங் கேட்டு 'இனிச்செய்ய அடுபபதென? என்று தங்களிலே விசாரித்தருளி 'தேவப் பெருமாள் பரமோதாரராயிருப்டா, பாட்டுக்குப் போர நலலராயிருப்பா' எனறு, ஆழ்வாா திருவரங்கபபெரு மாளரையரைக் குறித்து '319. "வேகவத்யுததரே தீரே க்ஷேத்ரே ஸதயவ்ரதாகூயகே। அஸ்தி காஞ்சீதி விகூயாதாபுரீ புண்யவிவர்த்தநீ ||" என்று புண்யவர்ததகமாகச் சொலலப் பட்ட காஞ்சீமஹாநகரியிலே தேவரீர் எழுநதருளிப் புண்ய கோடிவிமாநமத்யஸ்தராய் அகிலர்கரும ஸர்வாபேக்ஷித பரதராயிருககிற பேரருளாளரைப் பாடியுகப்பித்து 'நமகு ராமாநுசனைத் தரவேணும்' எனறு கேட்டுவாங்கி அழைத் துககொணடு எழுந்தருளவேணும்' எனறு விண்ணபபஞ் செய்ய, அவரும அபபொழுதே புறப்பட்டு நமபெருமாளுககு விணணப்பஞ்செய்து பெருமாள்கோயிலை நோககி யெழுந் தருள, இவா இபபடி எழுநதருளுகிற செயதியைககேட்டு ஸ்வஜநமான வரந்தருமபெருமாளரையர் எதிரே வந்து தமமுடைய திருமாளிகைககு எழுந்தருளுவிததுககொண்டு போய் ஸதகரிதது அமுது செய்விகக, இவரும் அதிபரீதரா யெழுந்தருளியிருகக, அதினமறறை நாள் விடிவோரை பேரருளாளர் வையமாளிகையிலே 'கசசிககுவாய்த்தான' எனகிற திருமண்டபத்திலே யேறியருளி அனைததுககொததி லுள்ள பரிகரமும ஸேவிததிராநிறகத் திருககச்சிநம்பியும் திருவாலவட்டமபரிமாற அருகே ராமாநுசனும் அவரருளிச் செய்த வரதராஜாஷ்டகததை அநுஸநதித்துககொண்டு ஸேவிதது நிறகச்செய்தே. திருவரங்கபபெருமாளரையர் எழுந்தருளின செய்தியைத திருக்கச்சி நமபி கேட்டருளி எதிர்கொணடு அரையரை ஸேவிக்க, அவரும கருபைபண்ணி

அநயோந்யம் குஶலபரப்ரஶ்நம்பண்ணிக் கொண்டிருக்கச் செய்தே, அரையரும் நம்பியுடனே 'பேரருளாளரை ஸேவிக்க வேணும்' என்று விண்ணப்பஞ்செய்ய, நம்பியும் பெருமாளுடைய திருவோலக்கத்திலே அழைத்துக்கொண்டு போக, அரையரும் வரதராஜனை ஸேவித்து 320 'கதா₃ புநஶ்ஶங்க₂ரத₂ாங்க₃கல்பக த்₄வஜாரவிந்த₃ாங்குஶவஜ்ரலாஞ்ச₂நம்| த்ரிவிக்ரம த்வச்சரணாம்பு₃ஜத்₃வயம் மதீ₃யமூர்த்₄ாநமலங்கரிஷ்யதி' என்று அநுஸந்தித்துக்கொண்டு தண்டன் ஸமர்ப்பித்து நிற்க, பெருமாளும் தீர்த்த₂ப்ரஸாத₃ங்களையும் ஸ்ரீசடகோபனையும் ப்ரஸாதித்தருள, இவரும் * 'திருப் பொலிந்த சேவடி என்சென்னியின்மேல் பொறித்தாய்' என்று ப்ரீதராய் நிற்கிறவளவிலே, பெருமாளும் இவரை அருளப்பாடிட்டருள, திருவரங்கப்பெருமாளரையரும் பக்தி புரஸ்ஸரமாக "என்னெஞ்சமேயான" என்று தொடங்கி "உலகேத்தும் மாழியானத்தியூரான" என்றும், 'பிணியவிழ் தாமரை மொட்டலர்த்தும் பேரருளாளர்" என்றும் "தொழுதெழுதொண்டர்கள் தமக்குப் பிணியொழித்த தமரா பெருவிசும்பருளும் பேரருளாளன்" என்றும் இப்படி ஆழ்வார்கள் திவ்யஸூக்தியான * பாலேய்தமிழான * பண்ணார் பாடலின் கவிகளைத் தேவகாநத்திலே இயலும் இசையுமாக நாடகத்துடனே பாட, "தென்னாவென்னும் மென்னம்மான்" என்கிறபடியே பேரருளாளரும் போர வுகந்தருளித் தாம் சாத்தியிருந்த திருமுத்தின் தாழ்வடம் திருப்பரியட்டம் சத்ரசாமராதி மற்றுமுண்டான வரிசைக ளெல்லாம் ப்ரஸாதித்தருள, இவரும் 'நாயந்தே! அடியேனுக்கு இவையொன்றிலும் அபேக்ஷையில்லை, தேவரீர் அர்த்தி₂தார்த்த₂பரித₃ாந தீ₃க்ஷிதராகையாலே அடியேன் அர்த்தித்ததைத் தந்தருளவேணும்' என்று விண்ணப்பஞ் செய்து பின்னையும் கநக்கப்பாடியருள, பெருமாளும் அத்தைக்கேட்டருளி ப்ரீதராய் † (நாமும் நம்பெண்டுகளு

† குண்டலிதகரந்தம் பல ஸ்ரீகோஶங்களில் இல்லை.

மொழிய) நீர்வேண்டினதைத் தருகிறோம்; அதைச் சொல்லிக்காணீர்' என்ன, அரையரும் ராமாநுசனைக்காட்டி 'இவரை அடியேனுக்குத் தந்தருளவேணும்' என்று விண்ணப்பஞ்செய்ய, பெருமாளும் 'அப்போதே அறியப் பெற்றிலோமே! இவரையொழிய நீர்வேண்டினதெல்லாந் தருகிறோம், கேளீர்' என்று அருளிச்செய்ய, அரையரும் 321. "ராமோ த்$_3$விர்நாபி$_4$ப$_4$ாஷதே" என்கிற தேவரீர் இரண்டுவார்த்தை யருளிச்செய்யலாமோ?" என்று விண்ணப்பஞ்செய்ய, பேரருளாளரும் இன்னுப்புடனே 'தந்தோம் கொண்டுபோகலாகாதோ! என்று அருளிச்செய்ய, திரு வரங்கப்பெருமாளரையரும் உடையவரைக் கையைப்பற்றி 'வாரும்' என்ன, உடையவரும் பேரருளாளர்க்குத் தண்டன் ஸமர்ப்பித்துத் திருவரங்கப்பெருமாளரையருடனே கோயி லுக்கு எழுந்தருளப் புறப்பட, பெருமாளும் இவர்க்கு விடைகொடுத்தருளினார், பின்பு உடையவரும் கூரத்தாழ் வானையும் முதலியாண்டானையும் பார்த்தருளி 'மடமே போய் நம்முடைய திருவாராதநமான பேரருளாளரையும் மற்றுமுண்டான ஸம்பந்தங்களையும் கொண்டுவாருங்கோள்' என்று அருளிச்செய்து மடம்புகுராமல் எழுந்தருள, அவர்களும் அப்படியே எழுந்தருளுவித்துக்கொண்டு கூடின வளவிலே, திருக்கச்சிநம்பியும் அவர்களை வழிவிட்டு மீண்டெழுந்தருளினார்.

உடையவரும் 322 "யத்$_3$க$_3$தவா ந நரோ யாதி நரகஞ் சாபயதே$_4$ாக$_3$திம்" என்று சொல்லுகிற பெருமையையுடைய ஸ்ரீரங்கத$_4$ாமமாகிற திருவரங்கந்திருப்பதியைநோக்கிப் பயணத்திலே யெழுந்தருளி வடவாற்றிலேநீராடிக் கேசவாதி த்$_3$வாத$_3$சோர்த்$_4$வபுண்ட்$_3$ரங்களைச் சாத்திக்கொண்டு இருந்தவளவிலே, இவர் எழுந்தருளின செய்தியை ஆள வந்தார் ஸ்ரீபாதத்துப் பெரியநம்பி முதலான முதலிகளும் ஜீயர்களும் ஏகாங்கிகளும் ஸ்ரீவைஷ்ணவர்களும் கேட்டருளி பெருமாளுக்கு விண்ணப்பஞ்செய்ய, பெருமாளும் ஸேனை

முதலியாருககு அருள்பாடிட்டருளி 'நம்மிராமாநுசனை எதிர கொண்டு அழைத்துவாரும்' என்று திருவுள்ளமாயருள, அவர் பெரியநம்பியுள்ளிட்ட முதலிகள் சீயர்கள ஸ்ரீவைஷ்ண வாகளுடனே பெருமாள பரிகரமான அனைத்துககொத்தில வர்களும் ஸேவிகக அகிலநருததகீ₃தவாத்₃யத்துடனே முகக ராய்ப்போருமவர்களை நித்யஸூரிகள விரஜைககரையளவாக வந்து எதிர்கொள்ளுமாபோலே திருக்காவேரி வடவாற்றின கரையளவாக வந்து எதிர்கொள்ள, ராமாநுசனும ஸேனை முதலியாரையும பெரியநம்பிமுதலானரையும ஸேவிதது அவர்களைப் பின சென்று கொண்டுபோய் "கொடியணி நெடுமதிள் கோபுரங்குறுகினர்" எனகிறபடியே * திட் கொடிமதிளையும் தாமோதரன் திருக்கோபுரததையுங் கிட்டி ஸாஷ்டாங்க₃ப்ரணாமம்பண்ணி, திருமாலைதந்த பெருமாள் திருவீதி முனனுகப்புகுநது ப்ரதக்ஷிணமாக எழுந்தருளி த்ரிவிக்ரமன திருவீதியையும பரதக்ஷிணமாக எழுந்தருளிப புகுந்து பெரியபலிபீடத்தடியிலே சென்று தண்டனஸமாப பித்து, ஸேவாகரமத்திலே ஆளரியையுந் திருவடிதொழுது, ஸ்ரீரங்கநாயகியாரையும் ஸேவித்து, ஸ்ரீ சந்தரபுஷ்கரிணி யிலே தீர்தத ஸவீகாரம் பண்ணியருளி, திருககோபுரத்து நாயனார்களையும ஸேவித்துப புகுந்து, * கடைத்தலையிருந்து வாழும் சோம்பரான நமமாழவார் முதலான ஆழவார்களை யும் ஸேவித்து, மற்றும் சுற்றியுள்ள எம்பெருமானகளை யும் ஸேவிதது, * அணியனார்செமபொனாய அருவரை யனைய கோயிலாகிய * அணியரங்கன் திருமுற்றததே புகுந்து தண்டன ஸமாபபிதது உளளேசென்று ப்ரதக்ஷிணமாக எழுந்தருளி பரணவாகாரமான திவயவிமானத்தையும், ஸேவிதது, ஸேனைமுதலியாரையுந் திருவடிதொழுது, அழ கியமணவாளன் திருமண்டபததேற எழுநதருளினவளவிலே, "வந்தவரெதிர கொள்ள மாமணிமண்டபதது" எனகிற படியே முக்தனைப்ப போருமவனை ஸ்ரீவைகுண்டநாதன எதிர் கொள்ளுமாபோலே நமபெருமாள் திருககைததலத்திலே

எழுந்தருளிப் புறப்பட்டு அழகிய மணவாளன் திருமண்டபத்தளவாக எழுந்தருளி எதிர்கொண்டு உள்ளே புகுந்தருள. உடையவரும் விழுவது எழுவது தொழுவதாய் ஸேவித்துத் திருப்பள்ளியறையிலே புகுந்து * அரங்கந் தன்னுள் பாம்பணைப் பள்ளிகொள்ளும * கடலவிளங்கு கருமேனியம்மானறனைக் கண்ணாரக்கண்டு உகந்து *மணத்தூணைபற்றிநின்று * வாயாரவாழ்த்தி ப்ரேமபரவஶராய், அமலனாதிபிரானிற்படியே பாதாதி கேஶாந்தமாக "கண்டகண்கள் மற்றொன்றினைக் காணாவே" எனனும்படி பெரிய பெருமாளை யநுபவித்து, திருப்பல்லாண்டையும் அநுஸந்தித்து, 323. "நமோ நமோ வாங்மநஸாதிபூ₄மயே நமோ நமோ வாங்மநஸைகபூ₄மயே। நமோ நமோऽநந்தமஹாவிபூ₄தயே நமோ நமோऽநந்ததயைகஸிந்த₄வே ॥" "ந த₄ர்மநிஷ்டோ₂ऽஸ்மி ந சாத்மவேதீ₃ ந ப₄க்திமாம்ஸ்த்வச் சரணாரவிந்தே₃। அகிஞ்சநோऽநந்யக₃திஶ ஶரண்ய த்வத்பாத₃மூலம் ஶரணம ப்ரபத்₃யே ॥" என்று தமபரமாசார்யரான ஆளவந்தார் திவ்யஸூக்தியை அநுஸந்தித்து ஸேவித்துநிற்க, பெரியபெருமாளும ராமாநுசனை மிகவும் க்ருபைபண்ணியருளி தீர்த்தப்ரஸாதங்களும் பரஸாதிதது "நின்செம்மா பாதபற்புத்தலைசேர்த்து" என்கிறபடியே * தேனேமலரும் * திருக்கமலபாதமான * துயரறுசுடரடிகளாலே இவருடைய உததமாங்கத்தை அலங்கரிகக, இவரும் * தாளிணைக்கீழ் வாழ்ச்சியைபபெற்று நிரதிஶயாநந்தநிர்ப்பரராய் ஸேவித்துக கொண்டு நிற்க, பெரியபெருமாளும உடையவரைத் * தம தாமரைககண்களால நோககி * சோதிவாய் திறந்து "பொங்கோதஞ்சூழ்ந்த புவனியும் விண்ணுலகும்" என்கிற உப₄ய விபூ₄த்யைஶ்வர்யததையும் உமக்கும் உம்முடையார்க்குந் தந்தோம்; நம்முடைய வீட்டின் காரியத்தையெல்லாம ஆராய்நதுநடத்தும்' என்று † (திருவுள்ளமாயருளி உடையவரென்ற திருநாமமும்) பரஸாதித்தருள, உடையவரும்

† குண்டலிதக்ரந்தம் சில பிரதிகளில் உள்ளது.

தீர்த்தப்ரஸாதமும் * சூடிக்களைந்த * தணடுழாய்விரைநாறு கணணிததிருமாலை பரஸாதமும * பொது நிற பொனனங் கழலான ஸ்ரீ ஈடகோபனும 'வானவர் நாட்டையும் நீ கண்டு கொள்'' எனகிற உடயவிபூதயைமவர்யமும கரதலாமலக மாக ப்ரஸாதிககபபெறறு, பெரியநமபி திருமுக மண்டலத தைப பார்ததருளி '"பெரியாராககாட்படடககால பெறுத பயன பெறுமாறு!' எனறு தேவரீா திருவடிகள் ஸமபந் தத்தை யிடடுப பெருமாள் இபபடி அடியேனை வாழ்வித் தருளினா எனறு விணணபபஞ்செயய பெரியநமபியும '"கலியுங்கெடுங கண்டுகொண்மின' எனறு ஆழவாா அருளிச்செய்த ப₄விஷயத₃ர்தத₂ம் பரதயக்ஷமாச்சுது' எனறு அருளிச்செய்து, 'பெருமாள நியமிததருளின கார்யம் செய் தருளலாகாதோ? என்ன, உடையவரும பெரியதிருமண்ட பததே எலலாருடனும எழுநதருளியிருந்து கருவூலங்களை யெலலாம் ஆராய்ந்து அமுதுபடி சாததுபபடி திருமாலை திருவிளககுகளெலலாம் ஆராய்ந்து நடததி, மற்றும திரு வாராதநததுக்கு வேண்டினவையெலலாங குறைவறநடததி, கோயிலனைத்துக கொநதிலவாகளுடையவும ஏறறத்தாழவு களும ஆராய்ந்து, - திருமதிளகள முதலான விடங்களில திருப்பணிகளும நடத்தியருளி * வணடினமுரலுஞ சோலை மயிலினமாலுஞ் சோலை கொணடலமீதணவுஞ் சோலை குயிலினங்கூவுஞ் சோலை * கடியாா பொழிலகளில திருச் சண்பகந் தொடககமான திருபபூமரஙகளும திருநநதவனங் களும ஆராயநதருளி, மறறுமுண்டான திருவிளையாட்டு ஸீமைகளுமெலலாம் ஆராய்ந்துகொணடு போருகிறவள விலே, அகளங்க நாட்டாழவானை ஶிஷ்யனைககிக கோயிலுககு மேலகாவலாக் வைத்தருளி "திங்களும் நாளும் விழாவறுத" எனகிறப்படியே நித்யோத்ஸவ பக்ஷோதஸவ மாஸோத்ஸவ ஸம்வத்ஸரோத்ஸவம முதலான மஹோதஸவங்களெலலாம தாழ்வற நடததிககொண்டு போருகிற காலததிலே;

## எம்பாரைத்திருத்திய விபரம்

முன்பு திருமலைநம்பி ஸந்நிதிக்குப் போகவிட்டிருந்த ஸ்ரீவைஷ்ணவர் ஹர்ஷபரகர்ஷத்துடனே மீண்டெழுந்தருளி உடையவர் திருவடிகளிலே ஸேவிக்க, இராமானுசனும் அவருடைய முகவிகாஸத்தைக்கண்டு கார்யஸித்தியை நிச்சயித்து ப்ரீதியுடனே 'அந்த வ்ருத்தாந்தத்தை விவரமாகச் சொல்லும்' என்ன, ஸ்ரீவைஷ்ணவரும் "தேவரீர் விடை ப்ரஸாதித்தருளினபின்பு திருமலைக்குப்போய்த் திருமலை நம்பியை ஸேவித்து, தேவரீர் நியமநப்படியே விண்ணப்பஞ் செய்தேன்; நம்பியும் கேட்டருளி 'இது நாமே செய்யக்கடவதாயிருக்க, நம்மிராமானுசனும் * எண்ணம்புகுந்து திருத்திக்கு மழுகாகப் பெற்றதே!' என்று தேவரீரானுகூலயத்துக்கு உகந்த திருவுள்ளத்தராய்த் தத்க்ஷணமேஸ்ரீபாதத்து முதலிகளுடனே அடியேனையுங் கூட்டிக்கொண்டு காளஹஸ்தி குளக்கரையிலே ஒருமரத்தடியிலே எழுந்தருளியிருக்க, உள்ளங்கை கொணர்ந்த நாயனாரும் அங்கேருத்ராபிஷேகார்த்தமாகக் குடங்கொண்டு ருத்ரபரமானபாட்டுகளையுங் கற்றுக்கொண்டுவர, நம்பியும் †கொன்றைச்சடையானைக் குளிரநீராட்டினு லென்னுனக்குண்டாம் பயன்' என்றுஅருளிச்செய்ய, நாயனாரும் இப்பாசுரங்கேட்டுநம்பியை ஸமயமாந முகனாய் ஏறப்பாரா நின்று கொண்டுபோக, இவரும் அவன் செய்யும்சேமத்தையெண்ணித *தெளிவுற்ற சிந்தையராய் மீண்டு திருமலையிலே போய் வ்யாக்யாநித்துக்கொண்டு எழுந்தருளியிருந்தார். பின்னையும் ஒரு நாள் முன்புபோலே அக்குளக்கரையிலே வடவ்ருக்ஷச்சாயையிலே எழுந்தருளியிருக்க, அங்கே நாயனாரும் அபிஷேகஜலஹரணார்த்தமாகக் குடமெடுத்து வருமது கண்டு நம்பியும் * அப்போதொரு சிந்தைசெய்து 'என்மனஞ்சூழ வருவானுய் * உறங்குவான

† 'கொன்றைச்சடைமுடியானைக் குளிரநீராட்டினுல்' என்று காணகிற பாடம் வெண்பாவின லக்ஷணத்துக்குச் சேராது.

போல யோகுசெய்வான் தானே * உணர்வைப பெறவூர்ந் தவன உறங்குகிருனே' என்று, தமமுடைய ஆசார்ய தி₃வ்யஸூக்தியிலே 324. "ஸவாப₄ாவிகாநவதி₄காதி ஶயே ஶிதருத்வம' எனகிற ஶ்லோகததை ஒரு ஓலைப்புறத திலே யெழுதி அவன வருகிறவழியிலே போகவிடுத திருகக, அவனும அவ்வழியில வந்து அவ்வோலையைக கண்டெடுதது வாசிததுககொண்டு கடககபபோகட்டு ஜலததை ஆஹரிததுககொண்டு மீண்டு போகிறவன ஜலததையும இறககி முனபெறிந்த ஏடடைத தேடி யெடுதது மீண்டு குடமெடுததுககொணடு வருகிறவன எங்களைககண்டு 325. "ஶோகஶ்ஶ்லோகத்வமாக₃த:' என்று ஸ்ரீவால்மீகபகவாந அர்த்தசிந்தனை பண்ணினுப போலே இவனும் ஶ்லோகார்தத₂ பர்யாலோசனைபண்ணு நின்றுகொண்டு கிட்டவநது நின்று 'உங்கள்கையில நழுவின பொருள் இதுவோ?' என்ன, நமபியும், 'வேறே சிலர் பொருள் நழுவுமதொழிய எங்கள் பொருள் நழுவுமதல்ல' என்ன, அவனும 'அது கிடக்கிடீர், நீங்கள் எலலாரும் ஓரிடத்திலே நடககிறதென?' என்ன, நமபியும் 'மார்க்கம் கலக்கமற்றிருக்கையாலே' என்ன, அவனும் சேவலருககு மார்ககங்களுண்டோ?' என்ன, இவரும '*பொருள்கை யுண்டாய்ச் செலலுமவனுககு அடுபபது இதுவனறே?' என்ன, அவனும் 'இப்போது நீங்கள் உறறுரை விட வந்தீர்களோ?' என்ன, இவரும 'அதலல, கறவைகள் கொள்ள வந்தோம' என்ன, அவனும், 'அனுஷ்டாதாக் களுககும பாரமபாத₃து₄ளி பவிதரமனறே? என்ன, இவரும் 'அது இடமறிநது நோபடில நலலது என்ன, அவனும் 'குறுககு நெடுககாகில பேதமென? என்ன, இவரும் 'செவவையிருக்கத திர்யககாகையே பேதம என்ன, அவனும் 'இது புதுவார்த்தைககடடுக்களோ?' என்ன, இவரும் 'பழையவார்த்தைக கட்டுகளும் இப்படியே' என்ன, அவனும 'இதிலே பூர்வவிசாரம வேண்டாவோ?' என்ன, நம்பியும் பரத்வத்திலேகாண் விசாரமிருப்பது' என்ன, நாயனாரும்

நிருத்தரனுய் நம்பியை ஏறப்பாராநின்றுகொண்டு யதா₂ஸ்தா₂நமே போம்போது தலைதுலுக்கி அடைவுகேடு காண லாமபடி போனை, நம்பியும் அதுகண்டு ·326. "பரஸாத₃மக₃மச்சித்தம்" என்னுமாபோலே நெஞ்சமுருகா நின்றதே! * அவரேயினியாவாரே' என்று அநுஸநிததது ஸாத₄யகோடியிலேறிட்டு முதலிகளுடன ஸலலாபித்துக் கொண்டு திருமலையே மீண்டு எழுந்தருளினர்" என்ற வாறே, உடையவருமம மிகவும் ஆநந்திததுக கூரத்தாழ வானையும் முதலியாண்டானையும் இருந்த முதலிகளையும் பார்த்தருளி கேட்டீர்களோ, கோவிநதனுக்கு ஆளவந்தார் திவ்யஸூகதி நெஞ்சிலுற்று அதற்கு வாங்மாதரத்தாலே வைதண்டி₄கச்ச₂ாயையைக் காட்ட, அதற்கு நம்பியும சா₂யா மாத்ரத்தாலேஸது₃த்தரங்களை வாக்சாதுர்யங்களாலே ரசிகக, கோவிந்தனும ஶாஸ்த்ரவித₃க்₃த₄னுகையாலே நமபியினுடைய ஸ்ரீஸூகதிவைஶாரத்₃யகரமங்களிலே யீடுபட்டு நிருத்தரனுனிறே: எங்ஙனேயெனில்,- 327. "கூடஸ்தே₂ாऽக்ஷர உச்யதே" "அமரர்களாதி முதலவன", 328 "தே₃ஹீ ஸந்மார்க்க₃வாத்த₄ந" "நெறிவாசல் தானேயாய நின்றான்." 329. "கஶ்சிந் மாம் வேத்தி தத்வத:" "யானே நீ யென னுடைமையும் நீயே." 330. "ஜ்ஞாநேந ஹீந பஶுபி₄ஸ் ஸமாந." "என்னினைந்து போக்குவரிப்போது." 331. "யே வா லலாடபடலகே லஸதூ₃ர்த்₄வ புண்ட₃ரா" "தவளப் பொடி கொண்டுநீறிட டுடுமின." 332. "ஊர்த்₄வ புண்ட₃ரந்த₃விஜாதீ₃நாம்" "நீறுசெவ்வேயிடக்காணில்." 333. "வேத₃மூலபரமாணுத்' "மிககவேதியா வேதம." 334. "ஸதே₃வ ஸோமயேத₃மக்₃ர ஆஸீத்". 335. "த₄ாமே ஸர்வம ப்ரதிஷ்டி₂தம்," 336."அவித்₃யயா மருத்யும் தீர்த்வா வித்₃யயாऽம்ருதமஶ்நுதே'. 337. "ப்ரணவோ த₄நுஶ்ஶரோ ஹ்யாத்மா ப்₃ரஹ்ம தல்லக்ஷ்யமுச்யதே| அப்ரமததேந /வேத்₃த₄வ்யம் ஶரவத் / தந்மயோ ட₄வேத்". 338. "நாராயணுத்₃

/ 'பே₃ாத்த₄வ்யம்' எனறும், 'சரவத்ததவயோக₃வித' என்றும காண்கிறது.

ப்₃ரஹ்மா ஜாயதே, நாராயணாத்₃ருத்₃ரோ ஜாயதே'' என்று இப்படிப்பட்ட ஶ்ருதிஸ்ம்ருதீதிஹாஸ புராணாதிகளிலே ப்ரதிபாதிக்கிற அர்த்தங்களையெல்லாம் தத்காலத்திலே மநஸ்ஸானது அவகா₃ஹிக்க, கோவிந்தனும் நிருத்தரனாய் டோ₃லாயமாநசித்தனாய்ப்போகையாலும், இவரும் அவனை ஸாத்₄யகோடியிலே யேறிட்டுத் திருமபியருளுகையாலும். நம்பிக்கு அவனுடன் ஓடின ஸாமர்த்யமிருந்தபடியென்!' என்று விஸ்மிதராய் ஸ்ரீவைஷ்ணவரை உபலாளித்தருளி, 'பின்னையென்?' என்று கேட்டருள,

அவரும் 339. "யம் யம் ஸ்ப்ருஶதி பாணிப்₄யாம் யம் யம் பஶ்யதி சக்ஷுஷா। ஸ்தா₂வராண்யபி முச்யந்தே கிம்பு நர்பா₃ந்த₄வா ஜநா ||'' என்கிறபடியே தேவரீருடைய உப₄ய வித₄ஸம்ப₃ந்த₄ம் பழுதுபோமோ? மூன்றும் கக்ஷியில காரியஸித்தியைக்கேட்டருளவேணும் என்று விண்ணப்பஞ் செய்தார். எங்ஙனேயெனனில.— "திருமலைநம்பியும், திருமலையில் * சிந்தாமணியைத்திருவடிதொழுது புறப்பட்டு, காளஹஸ்தியெல்லைநிலத்தோப்பிலே எழுந்தருளியிருந்து ஸ்ரீபாதத்துமுதலிகளுக்குத் திருவாய்மொழி வ்யாக்யாநம் ப்ரஸாதித்தருளாநிற்க, நாயனாரும் ஒரு பாதிரிமரமேறிப் புஷ்பாபசயம் பண்ணாநிற்க, அவ்வளவிலே "திண்ணன் வீடு'' என்கிற திருவாய்மொழிக்கு அர்த்தம் அருளிச்செய்யாநிற்க, நாயனாரும் மூன்றுபாட்டளவும் பூப்பறிக்கைதவிர்ந்து கேட்டுக்கொண்டிருந்து நாலாம்பாட்டிலே "எம்பெருமானுக்கல்லால பூவும் பூசனையுந் தகுமே'' என்று வர, நாயனாரும் அம்மரத்தினின்றும் திடுக்கெனக்குதித்துக் கையிலிருந்த பூப்படலிகையையுஞ் சுழற்றியெறிந்து, தரித்திருந்த ருத்ராக்ஷத்தையும் அலங்கலழியவாங்கி வீசிப்போகட்டு, 'தகாது தகாது' என்று நம்பிதிருவடிகளிலே அடைவுகெட விழுந்துகிடந்து 340. "அஜ்ஞாநாசாரஹீநஶ்ச மலிநோ து₃:க₂ஸாக₃ரே। நிமக்₃ந'' என்றும், "நீசனேன் நிறைவொன்றுமிலேன'' என்றும் சொல்லுகிறபடியே தம்

வாததமாநத்தைச் சொலலி அதிவிஷண்ணராகிறார். எங்ஙனேயென்னில;— 'உப₄யவிபூ₄திநிர்வாஹத்துக்கு முடி சூடினவனிருகக விரிதலையாண்டியை விருமபினேனே!' என்றும, 'புதுக்கணிப்புடைய புண்டரீகாக்ஷனிருககப † பொறிபறக்குங கண்ணனைப் பூசித்தேனே!' என்றும, '* கடலமண்ணுண்ட கண்டனிருககக் * கறைகொண்ட கண்டனைககாமித்தேனே!' என்றும, '* கல்லெடுத்து கனமாரிகாத்த கற்பகமிருககக் கையார்கபாலியைக் கண்டு வணங்கினேனே!' என்றும், '* திருவிருந்தமார்பனிருககத * திருவில்லாத்தேவனைத தொழுதேனே!' என்றும், '* பீதக வாடைப்பிரானிருக்கப புலியுரியுடையானைப பினதொடர்ந தேனே' என்றும. 'சதிரான கங்கையடியானிருககச் சுடுகாடுகாவலனைச் சுற்றி வலமவநதேனே!' என்றும், 'பெருமலராகிற பெருந்துழாய்வநமிருககப பெருங்கையாறகுட மெடுததுப பேய்ச்சுரைககு நீரவார்த்தேனே!' என்றும், இபபடி பலவகையாகப புலமபி 'இவ்வாத்மாவை உஜ்ஜீவிபபிக்கவேணும' என்று தணடனிட்டு எழுந்திராமலிருகக நமபியும முதலிகளை முகம பார்தது 'ஸாத்₃தி₄யோக₃முண்டாயிருந்தது; ஆளவந்தார் கருபைபண்ணும்படிககுக குறையிலலை' என்று அருளிச்செய்து இவரையும முடிபிடித தெடுதது உடம்பையும் தடவிப பலபடியாக ஸாந்தவவாத₃நமபண்ணி 341. "ஆபிப₃ந்நிவ சக்ஷுர்ப்யாம்₄" எனகிறபடியே குளிரநோககி விஸரமப₄கத₂நம் நடவாநிற்க. இசசெய்தியை யடையககேட்டு ததஸத₂ாநததாரனைவரும வந்து நமபியுடனே 'எங்கள் ஸத₂ாநததுககுக் கடவரான இவரை நீங்கள் எங்ஙனே அமமானபொடியிட அடுக்கும?' என்ன, நமபியும் 'அம்மான்பொடிககு ஈடுபட்ட இவரையே கேட்டுக்கொள்ளுங்கோள், எங்கள்வழி அந்யாத₃ரும, அசலவழி வருகிறோமலலோம' என்ன, அவர்களும நாயனாரை 'வாரும்' என்று கையைப பிடிகக, இவரும கையை உதறி

† 'புகைக்கண்ணனை' என்று பாடாந்தரம்.

'நம்மையைப் பிடிககககூடுமோ?' என்று கருவூலத்தின திறவு கோல இலச்சினைமோதிரம் முதலானவறறையும போகட்டு 'இனி உங்களுக்கும நமக்கும பணியிலலை' என்று கைதட்டி முகம்திருபபிநிறக, அவர்களும் நிராஸராய் நம்பியுடனே 'நாங்கள் இச்செய்திகளையெலலாம நேற்றே கேட்டோம். நங்கள் பிரான நமவழி வருவாரெனறு உஙகளுடனே சண்டைக்கு நிறபதாக எண்ணியிருந்தோம், காளஹஸதியுடையாரும் எங்கள்களுவிலே '342. "பாஷண்ட₃பௌ₃ளத்₃த₄சார்வாகைஸ்தரயீத₄ர்மோ விலோபித." என்கிறபடியே வேத₃பாஹயரான பௌ₃ளத்₃த₄ாதிகளாலே வேத₃ஸாஸத்ரஙகள் பரமுஷிதங்களாகாநிறக, 343. "தரித₃ண்டத₄ாரிணெபூர்வம் விஷ்ணுநா ரக்ஷிதா தரயீ" எனறு சொலலுகிறபடியே நாஸதிகநிரஸநார்த்தமாக தரித₃ணடஸந்யாஸியான த₃ததாதரேயரைப்போலே ஸேஷாஸந அநந்த வைநதேயர்கள் யமுனைத்துறைவர் இளையாழவார் கோவிந்தபட்டராகவும். இவாகள் சேர்த்திககு ஸங்கசக்ராமஸங்கள் முதலியாண்டான கூரததாழ்வானகவும். மறறுமுள்ள விஷ்ணுபார்ஷதங்களும் இப்படியே வநது அவதரிததார்கள், இது நமக்கு ப்ரியமாகையாலே. கோவிந்தபட்டருககு முனபு காஸிவாஸாபேக்ஷயிருககையாலே அந்த புத்தியைத் தவிர்க்கைக்காக நாமே உளளஙகை கொணாநத வ்யாஜமிட்டு அழைததுவைததுககொண்டதொழிய மற்றில்லை. ஆகையால, அவாகள் ஸவேச்ச₂ாவிஹாரிகள் எனறு சொனனா' எனறு சொல்லி மீண்டுபோக. நமபியும். இவரைக் கூட்டிககொண்டு திருப்பதியேற எழுந்தருளித தத்க்ஷணமே † உபநயநாதிகளையுஞ் செயவிதது 344. "ஸமஸ்காரா' பஞ்ச காதத வ்யா:" எனறு நெடுமாலருவியாகிய ஸ்வாமி புஷ்கரிணிக் கரையிலே பஞ்சஸமஸகாரஙகளையும் ப்ரஸாதித்தருளி. திருப்பல்லாண்டு முதலாக ஆழவார்களுடைய திவ்யப்ரபந்தங்களையும் ஓதுவித்து. அர்ததபஞ்சகஜ்ஞாநததையுமுண்டாககி

† 'வபநாதிகளையும்' என்று பிரதிபேதம்.

விசேஷித்து க்ருபைபண்ணியருளினார். இவரும் * "தேவு மற்றறியாதே ஆசார்யபதைகநிஷ்டராய், 345. "அஹம் ஸர்வங்கரிஷ்யாமி" என்றிருக்குமவரைப்போலே ஒழிவில காலத்திறபடியே அவர் திருவடிகளிலே * சிந்தையாலும் சொல்லாலும் செய்கையினாலும் ஸர்வித கைங்கர்யங்களும் செய்துகொண்டிராநின்றார். இந்நாள் ஸேவித்திருந்து விடை கொண்டேன்' என்று விண்ணப்பஞ்செய்ய, உடையவரும் அந்த ஸ்ரீவைஷ்ணவரை மிகவும் க்ருபைசெய்தருளினார்.

அநந்தரம் இராமாநுசனும் பெரியநம்பி திருமாளிகைக்கு எழுந்தருளி அவர் திருவடிகளிலே தாளுந்தடக்கையுங் கூப்பித் தண்டன் ஸமர்ப்பித்து 'ஆளவந்தார் ஸ்ரீபாதத்திலே ஸேவியாத இழவுதீரத் தேவரீர் திருவடிகளிலே ஆஸ்ரயிக்கப்பெற்றேன்; தேவரீர் திருவுள்ளத்திலுண்டான அர்த்த விசேஷங்களை அடியேனுக்கு ப்ரஸாதித்தருளவேணும்' என்று விண்ணப்பஞ்செய்ய, நம்பியும் 'அப்படியே ஆகிறது' என்று 346. "அஹோ த்வயஸ்ய மாஹாத்ம்யமஹோ வீர்யமஹோ பலம । மந்த்ரரத்நம் ஸுபகரம் வேதஸாரம் ஸநாதநம் ॥ ஸர்வபாபக்ஷயகரம் ஸர்வபுண்யவிவர்த்தநம் । ஸ்ரீகரம் லோகவஸ்யஞ்ச/ஸத்யம் ஸம்ஸாரதாரணம் ॥" என்கிறபடியே பாபஹரமுமாய், புண்யவர்த்தகமுமாய், ஸம்ஸாரபந்தத்தையறுக்கவற்றாய், மிகவும் ஸ்லாகிக்கப்பட்டு வேதஸாரதமமாய், மாங்கள்யகரமாய், மந்த்ரரத்நமாகிற த்வயார்த்தத்தை ஸவிசேஷமாக ப்ரஸாதித்தருளி, 'இன்னமும் சில அர்த்தவிசேஷங்களுண்டு, அவற்றை ஆளவந்தாருடைய அபிமாநாந்தர்ப்பூதரான திருக்கோட்டியூர்நம்பி ஸ்ரீபாதத்திலே சென்று கேளும்' என்று அருளிச்செய்தார்.

பெரியநம்பி ஸ்ரீபாதத்திலே ஆஸ்ரயித்த முதலிகள்—இளையாழ்வார், மலைகுனியநின்றபெருமாள், பிள்ளைதிருக்குலமுடையார், பட்டாரியரிலசடகோபதாஸர் என்று நாலு முதலிகள்.

---

/ (பா) ஸத்யஸ ஸம்ஸாரதாரகம்

# இளையாழ்வார் திருக்கோட்டியூர் நம்பியினிடத்து விசேஷார்த்தங்கேட்டல்

இராமானுசனும் அங்கேற எழுந்தருளித் திருக்கோட்டியூர் வாஸிகளான *மாறறிவி சோறிட்டுத் தேச வார்த்தை படைக்குமவர்களை 'நம்பி திருமாளிகை எங்கே?' என்று கேட்டருள, அவர்களும் 'அப்பாலே தோன்றுகிற கூரை' என்று காட்ட, அவ்விடந்தொடங்கி நம்பி திருமாளிகையளவும் தண்டனிட்டுக்கொண்டு எழுந்தருள, அப்போது அவ்வூரில *குற்றமின்றிக் குணம்பெருக்கிக் குருக்களுக்கு அநுகூலரான ஸத்துக்கள் நம்பிப்ரபாவம் அறிந்தார்கள். உடையவரும் நம்பி ஸ்ரீபாதத்திலே சென்று ஸாஷ்டாங்கதண்டம் பண்ணி 'தேவரீர அடியேனுக்கு ரஹஸ்யார்த்த விசேஷங்களையெல்லாம் ப்ரஸாதித்தருள வேணும்' என்று விண்ணப்பஞ்செய்ய, அவரும் இவருடைய அத்யவஸாயபாஹுள்யத்தை அறியவேணுமென்று '*ஆருக்கென் சொல்லுகேன?' என்று முகங்கொடாமல் எழுந்தருளியிருக்க, உடையவரும் மீண்டு கோயிலேற எழுந்தருளினார். பின்பு நம்பியும் கோயிலுக்குத் திருநாள்ஸேவிக்க எழுந்தருளித் தம்மூரே திரும்பி எழுந்தருளுகிறவரை நம்பெருமாள் அருளப்பாடிட்டுத் திருமாலை திருப்பரியட்டம் தீர்த்தம் சடகோபனும் ப்ரஸாதித்து 'நம்மிராமானுசனுக்கு ரஹஸ்யார்த்தங்களை உபதேசியும்' என்று ஆஜ்ஞாபிக்க நியமித்தருள, நம்பியும் '347 "நாஸம்வத்ஸரவாஸினே ப்ரப்ரூயாத" என்றும், 348. "இதம் தே நாதபஸ்காய" என்று தொடங்கி 348. "ந சாஶுஶ்ரூஷவே வாச்யம்" என்றும் தேவரீர் நியமித்தருளிறறே!' என்று விண்ணப்பஞ்செய்ய, பெருமாளும் 'அப்படியன்று; 349. "ஶரீரம் வஸு விஜ்ஞானம்" என்றுதொடங்கிச் சொல்லப்பட்ட ஶிஷ்யலக்ஷண பூர்த்தியுள்ள உடையவருக்குச் சொல்லக்குறையில்லை' என்று அருளிச்செய்ய, நம்பியும் உடையவரைக் குறித்து 'ஊரேற

வாரும் என்று அருளிச்செய்து எழுந்தருள, இராமாநுச னும் திருக்கோட்டியூர்நம்பி ஸந்நிதிக்குச்செல்ல, அவரும் 'இறைறைகக்குப்போய்வாரும்' என்ன, இவரும் மீண்டு கோயிலேற எழுந்தருளினார். இப்படி பதினெட்டு பர்யாயம் எழுந்தருளி ஸ்ரீபாதத்திலே ஸேவித்து நின்றவளவிலும், நம்பியும இவருடைய த₃ருட₄ாத்₄யவஸாயபரீக்ஷார்த்தமாக ஒன்றும் அருளிச்செய்யாமலிருக்க, இராமாநுசனும் பெரிய ஆர்த்தியோடே மீண்டு * இணைமலர்க்கண்ணீர் ததும்பக் கோயிலேற எழுந்தருளியிருந்தார். அவ்வளவிலே திருக் கோட்டியூர்நம்பி ஶிஷ்யரான ஒரு ஸ்ரீவைஷ்ணவர் வந்து நம்பெருமாளை ஸேவித்து மீண்டு எழுந்தருளுகிறவர், உடையவர் ஸ்ரீபாதத்திலே ஸேவித்துநிற்க, அவருடனே தம்முடைய ஆர்த்தியெல்லாந் தோன்றும்படி "பூந்துழாய் முடியார்க்குத் * தகவல்ல, * பொன்னாழிக்கையாருக்குத் * தகவல்ல" என்று விண்ணப்பஞ்செய்து போகவிட்டருள, அந்த ஸ்ரீவைஷ்ணவரும் நம்பி திருவடிகளிலே சென்று தண்டனிட்டு அச்செய்தியை விண்ணப்பஞ்செய்ய, நம்பியும் 'இத்தனை ஆர்த்தியுண்டாவதே!' என்று உகந்தருளி, 'தண்டும் பவித்ரமுமாகத் தாம் ஒருவரே வருவது' என்று அவரையே மீண்டு இராமாநுசன்பக்கல் போகவிட்டருள, ஸ்ரீவைஷ்ணவரும் உடையவர் திருவடியேறச்சென்று தண்டனிட்டு நம்பியருளிச்செய்ததை விண்ணப்பஞ்செய்ய, உடையவரும் கேட்டருளி மிகவும் உகப்போடே அவரைத் தண்டனிட்டு, கூரத்தாழ்வானையும் முதலியாண்டானையுங் கூட்டிக்கொண்டு அதித்வரையோடே திருக்கோட்டியூரேறச் சென்று நம்பி திருவடிகளிலே தண்டன்ஸமர்ப்பித்து நிற்க, நம்பியும் உடையவரைப் பார்த்து 'உம்மை யொருவரையு மன்றோ வரச்சொன்னோம், இவர்களைக்கொண்டு வருவா னென்?' என்று கேட்டருள, உடையவரும் 'தேவரீர் தண்டும பவித்ரமுமாகவன்றோ வரச்சொல்லியருளிற்று; இவர்களைத் தண்டும் பவித்ரமுமென்றே கூட்டிக்கொண்டு வந்தேன்' என்று விண்ணப்பஞ்செய்ய, நம்பியும் 'தண்டு ஆர்? பவித்ரம

ஆர்? என்று கேட்டருள உடையவரும் முதலியாண்டானைக் காட்டி 'இவர் த்ரிதண்டம்.' கூரத்தாழ்வானைக்காட்டி 'இவர் பவித்ரம்' என்று அருளிச்செய்ய. நம்பியும் 'ஆகில, இவ்வர்த்தத்தை இவர்களுக்கொழிய மற்றொருவர்க்கும் சொல்லாதேகொள்ளும்' என்று நியமித்தருளித் தம் திருவடிகளைத் தொடுவித்துச் சூளுறவுகொண்டு பரமகருணையாலே
350 "ப்ரணவாத்$_3$யம் நமோமத்$_4$யம் நாராயணபதா$_3$ந்திமம்|
மந்த்ரமஷ்டாக்ஷரம் வித்$_3$யாத் ஸர்வஸித்$_3$தி$_4$கரம் § ந்ருணாம்||
முமுக்ஷுணாம் ஸதா$_3$ ஜப்யம் பு$_4$க்திமுக்திப$_2$லப்ரத$_3$ம்|
வைஷ்ணவாநாம் ஸதா$_3$ ஜப்யம் ப$_4$க்திஜ்ஞாந பரவர்த்த$_4$நம்||"
என்கிறபடியே எட்டுத்திருவக்ஷரமாய், பத$_3$த்ரயாத்மகமாய், ஜ்ஞாநப$_4$க்திவைராக்யஜநகமாகையாலே முமுக்ஷுக்களான ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு * நாத்தழும்பெழ ஸதா$_3$நுஸந்தே$_4$யமாய் * நலந்தருஞ்சொல்லான பெரியதிருமந்த்ரார்த்தத்தை ப்ரஸாதித்தருளினார். இராமாநுசனும் க்ருதார்த்தராய் அதின் மறுநாள் அவ்வூரிலெம்பெருமானை தெற்காழ்வார திருவோலக்கத்திலே அநேகம் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அப்பரமரஹஸ்யார்த்தத்தை அருளிச்செய்தருளினார்.

இச்செய்தியை நம்பி கேட்டருளி உடையவரை அழைத்து 'இந்தப்பரமரஹஸ்யார்த்தத்தை வேறொருவர்க்குஞ் சொல்லாதேகொள்ளும் என்றன்றோ நாம் உமக்குச் சொன்னோம், அத்தை மறுத்து நீர் அநேகம் ஸ்ரீவைஷ்ணவர்களுக்குச் சொன்னீரென்று கேட்டோம்' என்று கேட்டருள, உடையவரும் 'உள்ளது. தேவரீர் திருவடிகளை முன்னிட்டுக்கொண்டு சொன்னேன்' என்று விண்ணப்பஞ் செய்ய, நம்பியும் 'ஒருவர்க்குஞ் சொல்லவேண்டாவென்று நியமித்தன்றோ சொன்னோம்; அத்தை மறுத்துச்சொன்ன உமக்குப் ப$_2$லம் ஏது?' என்று கேட்டருள, உடையவரும் 'ஆசார்யநியமநத்தை மறுத்த எனக்கு நரகமே பலம்' என்று அருளிச்செய்ய, 'இத்தையறிந்திருந்தும் சொல்லு

§ 'ஸதா$_3$' என்றும் பாடம்.

வானேன?' என்று கேட்டருள, இராமநுசனும் 'அடியேன் ஒருவனேயன்றோ நரகம்புகுவது? தேவரீர் திருவடிகளை முன்னிட்டுக்கொண்டு சொல்லுகையாலே இவ்வாத்மகோடிக ளெல்லாம் தேவரீர்திருவடிஸம்பந்தத்தாலே உஜ்ஜீவிப்பர்க ளென்று சொன்னேன்' என்று விண்ணப்பஞ்செய்ய, நம்பி யும் 'இந்தப் பரஸம்ருத்₃தி₄ நமக்குக் கூடிற்றில்லையே!' என்று இவர் பரஸம்ருத்திக்குப்போர உகந்தருளி, 'எம் பெருமானாரே! வாரும்' என்று எடுத்துஅணைத்துக்கொண்டு, 'அவரோ நீர்?' என்று அருளிச்செய்து, 'இதுவரையில் இதர்ஶநம் பரமவைதிக₃ஸித்₃தா₄ந்த மென்றிருந்தது, இன்றுமுதல 'எம்பெருமானார்த₃ர்ஶநம்' என்னுங்கோள் என்று எல்லார்க்கும் அருளிச்செய்து, அந்த உகப்பின மிகுதியாலே 'வாரீர் எம்பெருமானாரே! இன்னமொரு சரமரஹஸ்யார்த்தவிஶேஷஞ் சொல்லுவதாக இராநின்றோம், இவ்வளவிலே நீர் த்ருப்தராயிராநின்றீர், உம்முடைய அத₄யவஸாயத்தைச சொல்லிக்காணீர்' என்ன, எம் பெருமானாரும் "தேவரீர் அருளிச்செய்த அர்த்தத்துக்கு மேலே ஓரர்த்தமுண்டென்றிருந்தேனாகில அவிஶ்வாஸி யாவேன, கேளாதிருந்தேனாகில அருளிச்செய்த அர்த்தம் நெஞ்சிற்பட்டதில்லையாம்' என்று விண்ணப்பஞ்செய்ய விரகறியாமல ஶ்ரோதவ்யஸாபேக்ஷனாய் வ்யாகுலாந்த: கரணனாய் இராநின்றேன்" என்று விண்ணப்பஞ்செய்ய, நம்பி யும், 'இப்போது போய் ஏகாந்தமாக நீர் ஒருவருமே வாரும்' என்று அருளிச்செய்ய, இவரும் கோயிலேறஎழுந்தருளினார்.

பின்பு, எம்பெருமானாரொருவருமே நம்பி ஸ்ரீபாதத் தேறச் சென்று தண்டன ஸமர்ப்பித்து நிற்க, நம்பி இவர் திருக்கையைப் பிடித்துக்கொண்டுபோய் ஏகாந்தமாக மேல தளத்திலே யேறிப் படிக்கதவை விழவிட்டு எழுந்தருளி யிருந்து, ஒருவர்க்குஞ்சொல்லாதபடி தம் திருவடிகளைத தொடுவித்துச் சூளுறவுகொண்டு தம்முடைய நிர்ஹேதுக

கருடையாலே 351. "ஸாவகுஹ்யதமம பூய ஶ்ருணு மே பரமம வச.। இஷ்டோऽஸி மே த்ருட இதி ததோ வக்ஷ்யாமி தே ஹிதம॥" என்று கீதாசாரியன அருளிச்செய்தாப்போலே நம்பியும ஸாவகுஹ்யதமமாய்ப பரம ரஹஸயமான சரமஶ்லோகத்தையும் அருளிச்செய்து அத்தால ப்ரதிபாதிக்கப்படுகிற இதரோபாயத்யாகபூர்வகமான ஸித்தோபாய வைலக்ஷண்யத்தையும் ப்ரஸாதிதது, 'இந்தப் பரமரஹஸ்யார்த்தத்தை 352. "இதந்தே நாதபஸகாய நாபக்தாய கதாசந। ந சாஶுஶ்ரூஷவே வாச்யம் ந ச மாம் யோऽப்யஸூயதி॥" என்று சொல்லுகிறபடியே பகவத் விமுகர் முதலான நாஸ்திகாசெவிப்படாதபடி பேணிக்கொண்டு போரும' என்று நியமித்தருள, இவரும் 'அடியேன் அப்படிப்பட்ட பேருக்குச் சொலலக்கடவேனல்லேன், பகவத்ப்ரவணரான கூரத்தாழவானொருவர்க்கும சொலலாதிருக்கவொண்ணுதே!' என்று விண்ணப்பஞ்செய்ய, நம்பியும் 'இவ்வர்த்தங்கேட்கைக்கு அதிகாரமுண்டேயாகிலும் 353. 'ஸம்வத்ஸரந் ததர்த்தம வா மாஸத்ரயமதாபி வா। பரீக்ஷ்ய விவிதோபாயை, க்ருபயா நிஸப்ருஹோ வதேத்॥" என்கிறபடியே பஹு ப்ரகாரததாலும் அவருடைய அத்யவஸாயததை யறிந்து ஒரு ஸமவதஸரம் ஶுஶ்ரூஷைகொண்டு சொலலும்' என்று நியமித்தருள, எம்பெருமானும் * மாயனனறேதிய வாககதனைக் கற்று யதார்ததஜ்ஞாநமுடையராய், அர்ஜுநன் ஷட்கதரயததிலும் எடுப்புஞ் சாய்ப்புமாய்ப போந்து இவ்வாததஙகேட்டு தரித்தாப்போலன்றிக்கே "மெயமமைப பெருவார்த்தை விட்டுசித்தர் கேட்டிருப்பர்" எனகிறபடியே நிரப்பரராய், நிர்ப்பரத்வாநுஸந்தாநத்தாலே வந்த ப்ரீதயுதத்ருதியாலுண்டான ராஜகுலமாஹாத்ம்யத்தோடே புறபபட்டுக கோயிலேற எழுந்தருளினர்.

அநந்தரம் கூரத்தாழ்வானும, எம்பெருமானர் ஸ்ரீபாதத்திலே தண்டனிட்டு நிற்க, அவரைப பார்த்தருளி 'ஆள

வந்தார நம்மை விசேஷகடாக்ஷம் பண்ணிப பேரருளாளரை நோக்கி ப்ரபத்தி பண்ணியருளினது ஸபூலமாமபடி நம்பி நம்மை வாழ்விததருளினர், கண்டீரோ?' என்று அருளிச செய்து உடையவரும் ஆழவானைக் குறித்து 'உமக்குமுட் பட ஒருஸமவத்ஸரம் ஶுஶ்ருஷைகொண்டு அத்யவஸாய பூர்ஹாஸ்யதனதயறிந்து சொலலென்று நியமிததருளினா என்ன, ஆழவானும 'ஒருஸம்வதஸரம் இச்ஶரீரததிறகு நிலையுண்டோ? இலலையோ? என்று வ்யாகுலாநத:கரண ராய் விசாரித்தருளிப்பெற்றுலலது தரியாத பேராசையாலே 'ஸம்வதஸர ஶுஶ்ருஷாஸமம் ஆசார்யன திருமாளிகை வாசலிலே மாஸோபவாஸம் பண்ணுகை' என்று ஶாஸ்தர முண்டாகையாலே அபபடிசெய்ய, உடையவரும் இரங்கி பரஸாதித்தருளினர்.

முதலியாண்டானும எமபெருமானர் திருவடிகளிலே தண்டன் ஸமர்ப்பித்து 'அடியேனுககும் இவ்வர்த்தம் ப்ர ஸாதித்தருளவேணும்' என்று விண்ணபபஞ்செய்ய, உடைய வரும் 'ஆழவான ஒருவர்க்குமே நம்பி ஸ்ரீபாததததிலே விண்ணப்பஞ்செய்துகொண்டது; நீர் நம்பி ஸ்ரீ பா த த தேறப்போய்க் கேளும்' என்று அருளிச்செய்ய, முதலி யாண்டானும் திருக்கோட்டியூரேற எழுந்தருளி நமபி ஸ்ரீபாததததிலே தண்டன ஸமர்பபித்துககொண்டு ஆறு மாஸம் நின்றவிடத்திலும் அவர் முகங்கொடாமலிருகக, பினபு ஆண்டானும் நம்பி திருவடிகளிலே ஸேவித்து நிற்க, அவரும் 'ராமாநுஜபரிகருஹீதனைப்போலே யிருந் தாயீ!' என்ன, 'அடியேன் தாஶரதி' என்ன, 'ஆகில், என்?' என்று கேட்டருள, இவரும 'சரமரஹஸ்யார்த்தமும் அடி யேனுககும் ப்ரஸாதிததருளவேணும' என்று விண்ணப்பஞ் செய்ய, நம்பியும '354. "வித்யா மதோ தநமதஸ் த்ருதீ யோऽபிஜநாநமத; ஏதே மதாவலிப்தாநாமேத ஏவ ஸதாநதமா:॥" என்கிற இம்மூன்று குறும்பும போனவை எம்பெருமானர் தாமே கருபைபண்ணி பரஸாதிததருளுவா;

அஞ்சாதேபோம்' என்று தம்திருவடித்தாமரைகளாலே இவர் உத்தமாங்கத்தைப் பூஷிக்கும்படி ப்ரஸாதித்து விடை கொடுத்தருளினார் முதலியாண்டானும் மிகவும் ஸமத₃மாத₃யாத்மகுணங்களையுடையராய்க் கோயிலுக்கு எழுந்தருளி, உடையவர் ஸ்ரீபாதத்திலே தண்டன்ஸமர்ப்பித்துத் தம்முடைய ஆர்த்தியெல்லாந்தோற்ற நம்பி அருளிச்செய்த படியை விண்ணப்பஞ்செய்து ஸவிநயராய் நிற்க, உடையவரும் தம் ஸந்நிதி முதலிகளைப் பார்த்தருளி 'ஆண்டான் நம்பிஸந்நிதியிலே ஸ்வரூபஶிக்ஷைபெற்று வந்த வேஷமிருந்த படி பாருங்கோள்' என்று அருளிச்செய்து, மிகவும் உகப்போடே ஆண்டானுக்கும் ஸர்வகு₃ஹ்யதமமான சரமஶ்லோகார்த்தத்தை உபதேசித்தருளி அதிஸந்துஷ்டராய் 'இப்போதன்றோ நமக்குத் தண்டும் பவித்ரமும் கைபுகுந்தது' என்று அருளிச்செய்தருளினார்.

## இளையாழ்வார் திருமாலையாண்டானிடத்துத் திருவாய்மொழிகேட்டல்

அநந்தரம் சிலநாளைக்குப் பின்பு, திருக்கோட்டியூர் நம்பி கோயிலுக்கு எழுந்தருளி நம்பெருமாளை ஸேவித்துப் புறப்பட்டுத் திருமாலையாண்டானையும் அழைத்துக்கொண்டு எம்பெருமானார்மடமேயெழுந்தருளினவாறே உடையவரும் நம்பி ஸ்ரீபாதத்திலே ஸேவித்து நிற்க, அவரைக் கடாக்ஷித்து 'நீர் திருமாலையாண்டானைப் பக்கலிலே திருவாய்மொழிக்கு அர்த்தம் கேளும்' என்று உடையவரை அவர்திருக்கையிலே காட்டிக்கொடுத்தருளித் தாம்மீண்டு திருக்கோட்டியூரேற எழுந்தருளினார்.

திருமாலையாண்டானும் நம்பி அருளிச்செய்தபடியே திருவாய்மொழி தொடங்கி நடத்தாநிற்க, ஆளவந்தார் அருளிச்செய்தபடி ஆண்டான் நிர்வஹித்தமொழியப் பாட்டுக்கள்தோறும் சில அர்த்தவிஶேஷங்களை ப்ரதிபாதித்து

உடையவர் அருளிச்செய்ய, 'இது ஆளவந்தார் அருளிச் செய்யக்கேட்டிலோம்' என்று அருளிச்செய்தருளி, "அறியாக் காலத்துள்ளே" என்கிற பாட்டுக்கு 'அறிவுநடையாடாத தசையிலே ஸம்பந்த ஜ்ஞானத்தைப் பிறப்பித்து, பிறந்த ஜ்ஞானத்தையழிக்கக்கடவதான தேஹஸம்பந்தத்தோடே பின்னையும் வைத்தாய் என்கிற இழவாலே அருளிச்செய்கிறார்' என்று திருமாலையாண்டான் அருளிச்செய்ய, உடையவரும் கேட்டருளி 'முன்னிற்பாட்டுக்களும் பின்னிற்பாட்டுக்களும் பெரியப்ரீதியோடே நடவாநிற்க, நடுவே அப்ரீதிதோற்றச் சொல்லுமது சேராது; ஆகையாலே, இங்ஙனேயாமித்தனை:— "அறியாமாமாயத்தடியேனை அறியாக்காலத்துள்ளே அடிமைக்கண் அன்புசெய்வித்து வைத்தாயால்" என்று அருளிச்செய்கிறார்' என்று இத்தையும் ஒரு உபகாரஸ்ம்ருதிபரமாக்கி அருளிச்செய்தவாறே, 'இது விஶ்வாமித்ர ஸ்ருஷ்டி, ஆளவந்தார் அருளிச்செய்யக் கேட்டிலோம்' என்று திருவாய்மொழிக்கு அர்த்தமருளிச் செய்கை தவிர்ந்திருக்க, திருக்கோட்டியூர்நம்பி இத்தைக் கேட்டருளிக் கோயிலிலே திருமலையாண்டான் பக்கலெழுந்தருளி 'திருவாய்மொழி நடக்கிறதோ?' என்று கேட்டருள, ஆண்டானும் 'அடியேன் ஆளவந்தார்பக்கல் கேட்ட அர்த்தமொழிய இவர் வேறே சில அர்த்தங்களை ஸ்வகல்பிதமாகச் சொல்லுகையாலே தவிர்ந்தேன்' என்ன, நம்பியும் 'அவர்சொன்ன அர்த்தமெது?' என்ன, ஆண்டானும் '"அறியாக்காலத்துள்ளே" என்கிற பாட்டுக்கு உபகார ஸ்ம்ருதியாகவேணுமென்கிறார்' என்ன, 'இவ்வர்த்தமும் ஆளவந்தார் அருளிச்செய்ய நாம் கேட்டிருக்கிறோம்' என்று நம்பி அருளிச்செய்து 'ஸாந்தீபநிபக்கலிலே க்ருஷ்ணன் வேதார்த்தயனம் பண்ணினாப்போலே காணும், உம்முடைய பக்கலிலே எம்பெருமானார் திருவாய்மொழி கேட்கிறதும், ஆளவந்தார் திருவுள்ளத்திலுள்ள அர்த்தமொழிய இவர்க்கு வேறொன்றும் ப்ரகாசியாது; இவர்க்கு நீர் அஜ்ஞாதஜ்ஞாபனம் பண்ணுகிறோமென்று இராதே கொள்ளும்' என்று

அருளிச்செய்து, திருமாலையாண்டானையும் பெரியநம்பி யையுங் கூட்டிக்கொண்டு எம்பெருமானார்மடமே யெழுந் தருள, உடையவரும் அதிப்ரீதியுடனே தானுந் தடக் கையுங் கூப்பி இவர்கள் திருவடிகளிலே ஸேவித்து நிற்க, இவர்களும் 'திருவாய்மொழி விட்ட தறுவாய் தொடங்கி நீரே பலகால அநுவர்த்தித்தாகிலும் ப்ரபந்தத்தைத் தலைக் கட்டும்' என்று ஆண்டானுக்கு அருளிச் செய்தார்கள். பின்னையுந் திருவாய்மொழி தொடங்கி நடவாநிற்கச் செய்தே, மீண்டும் ஒரு அர்த்தப்ரஸ்தாவத்திலே ஆண்டான் ப்ரதிபாதித்த அர்த்தங் கேட்டு "ஆளவந்தார் இப்படி அருளிச்செய்யார்" என்று உடையவர் விண்ணப்பஞ்செய்ய, ஆண்டானும் 'நீர் ஆளவந்தாரைக் கண்ணிலும் காணா திருக்க, 'இப்படி அருளிச்செய்யார்' என்கைக்கு நிதாநம் என்?' என்று கேட்டருள, உடையவரும் 'நான் ஆள வந்தாருக்கு ஏகலவ்யனன்றோ?' என்று விண்ணப்பஞ்செய்ய, ஆண்டானும் 'திருக்கோட்டியூர்நம்பி நமக்கு உரைத்தது ஒத்திருந்தது; இதுவும் ஒருதிருவவதாரம்; ஆளவந்தார் பக்கல் கேளாத அர்த்தமெல்லாம் இங்கே கேட்டோம்' என்று இவரைத் தண்டனிட்டருளினார்.

## இளையாழ்வார் திருவரங்கப்பெருமாளரைய ரிடத்தில் சரமோபாயத்தை யுணர்தல்

பின்பு எம்பெருமானாரும் திருவாய்மொழி சாத்திப் போர ப்ரீதராயிருக்க, அவரைப்பார்த்துப் பெரியநம்பியும் 'ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையர் பக்கலிலே இன்ன மொரு அர்த்தவிசேஷமுண்டு; அத்தை அவர்பக்கலிலே கேளும்' என்று அருளிச்செய்தருள, உடையவரும் அது லபிக்கைக்காக அன்றுமுதல் ஆறுமாஸம் அரையருக்கு உகப்பாகப் பாலமுதுகாய்ச்சி ஸமர்ப்பித்தும் திருவத்யயந காலங்களிலே அரையர் திருமேனிக்கு அநுரூபமாக மஞ்சட் காப்பு அரைத்து ஸமர்ப்பித்தும் அநுவர்த்தித்துப் போருங்

காலத்திலே, ஒருநாள் மஞ்சட்காப்பரைத்து நீராடப் பண்ணுகிற காலத்தில் அவருடைய திருமேனிக்கு அநுரூபமல்லாதிருக்கிறபடியை அவர் திருமுகமண்டல விகாரத்திலே கண்டு மஞ்சட்பாத்ரத்தைக் கடக்கவைத்து வேறே பாங்காக மஞ்சட்காப்பரைத்துச் சாத்திநீராட்டப்பண்ணியருள, திருவரங்கப்பெருமாளரையரும் அத்தைக்கண்டு மிகவுந் திருவுள்ளமுகந்தருளி உடையவரைக்குறித்து, என்னுடைய ஸர்வஸ்வத்தையுங் கொள்ளை கொள்ளவோ நீர் இப்படி செய்தது' என்று அருளிச்செய்து, 'வாரீர் எம்பெருமானாரே! உமக்கு ஒருசரமபுருஷார்த்தஞ் சொல்லுகிறோம்: கேளீர்' என்று '* தேவுமற்றறியாத ஸ்ரீமதுரகவிகளைப்போலே நீரும் 355. "குருரேவ பரம் ப்₃ரஹ்ம குருரேவ பரந்த₄நம்| குருரேவ பர: காமோ கு₃ருரேவ பராயணம்|| கு₃ருரேவ பரா வித்₃யா கு₃ருரேவ பரா க₃தி:|| யஸ்மாத் தது₃பதே₃ஷ்டாऽஸௌ தஸ்மாத்₃கு₃ருதரோ கு₃ரு:||" என்று சொல்லுகிறபடியே, * தீமனங்கெடுத்தும * மருவித்தொழும் மனமேதந்தும் * அறியாதனவறிவித்த ஆசார்யனே உபாயோபேயம்' என்று விஶ்வஸித்து, 356. "ஆசார்யஸ்ஸ ஹரிஸ்ஸாக்ஷாத் சரரூபீ ந ஸம்ஶய:" என்றும், "பீதகவாடைப்பிரானார் பிரமகுருவாகிவந்து" என்றும் சொல்லுகிறபடியே உறங்கும்பெருமாள் தானே உலாவும்பெருமாளாய் வந்தார் என்றிரும்' என்று பஞ்சமோபாயநிஷ்டையான சரமபர்வார்த்த₂விஶேஷத்தை ப்ரஸாதித்தருளினார்.

'பெரியநம்பி ஸ்ரீபாதத்திலே ஆஶ்ரயித்தபோதே ஸ்வரூபஸித்₃தி₄யுண்டாயிருக்க, இவர் பலர் ஸ்ரீபாதத்திலும் உபதே₃ஶங்கேட்கைக்கு அடியென்? அவர்கள் தாம் மேல்விழுந்து அர்த்தங்களை உபதேசிக்கைக்கு அடியென?' என்னில்—ஒருராஜா ஸ்வகுமாரார்த்த₂மாகப் பலமந்த்ரிகளிடத்தே நிதிகளைவைத்துத் தன்குமாரன் ப்ரபு₃த்₃த₄னானவாறே கொடுக்கச் சொல்லிப் போமாபோலே, ஆளவந்தாரும் இவர்களிடங்களிலே ஒவ்வொரு அர்த்தவிஶேஷத்தை உபதேசித்து

வைககையாலே, ஆளவந்தார் ஸ்ரீபாததநிலே ஸேவிநது அவ்வர்ததங்களைபபெருத இழவுதீர, இவர்கள்பககல அவ வர்த்தங்களைபபெறறு இழவுதீர்ந்தாரிததனே, இனி, இவ வாசார்யர்களுககு ஆளவந்தார் இளையாழவாரை '* ஆம முதலவன்' என்றுகடாக்ஷிதது 'நாம் உங்களுக்குச்சொலலும பரமரஹஸ்யததை இளையாழவாருக்குச சொலலுஙகோள' என்று நியமிததருளுகையாலே 'ஶிஷ்யனுகிலுமாம், ஆசா யனுகிலுமாம, விலக்ஷணஸம்பந்தமே வேண்டுவது' எனறு மேலவிழுந்து உபதேசிநதாாகள்: ஆகையாலே முனபுள்ள ஆசாாயாகள் இவர்கு ஆசார்யர்களாய் வீறுபெறறுர்கள், பின்புள்ளவாகள் இவர்க்கு ஶிஷ்யர்களாய் ஸவரூபம பெறறுர்கள், ஒருஹாரத்தின நடுவே மாணிக்கங கிடநது அந்தஹாரத்தை ஶோபி₄தமாககுமாபோலே, * இடையே இராமாநுசமுனியாய் விளங்கிறிறே.

உடையவா க₃த்₃யதரயமும,நிதயததிருவாராதநப்படியும அருளிச்செய்து 'பரப்₃ரஹ்மம் ஸ்ரீமநநாராயணனே எனறு அறுதியிட்டு த₃ாஶநப்ரவர்ததநம பணணிககொணடு போருகிற காலததிலே, இவர் ஏழகம மாது₄கரம பண்ணும போது † ஸதாநத்தாரை நெருககிககொண்டு போருகை யாலே அவாகளிலே ஒருவா இவர் மாது₄கர ‡ (மபண்ணுகிற விட) ததிலே விஷமிஶ்ராநநததை ப்ரயோகிககும்படி ‡ (நிய மித்து வைக்க, அந்த க்ருஹஸதரும்) ஸ்வஸ்தரீயை ப்ரேரிக்க, அவளும் 'கூடாது எனன, அவனும் நிர்ப்பந்திக்க, அவளும் விஷமிஶ்ராந்நத்தை மறிதது ஸமர்ப்பித்து தண்டனிட்டுபபோக, இவரும 'இதென?' எனறு திகைதது ப₄ாவமறிந்து ஸக₃ராந்நததை ஸாக₃ரக₃ாமிநியான திருக் காவேரியிலே கரைத்துவிட்டு உபவஸிததிருக்க, இச்செய்தி யைத திருககோட்டியூர் நம்பி கேட்டருளிக் கோயிலுககு எழுந்தருளாநிற்கச் செய்தே மத்₄யாஹ்நகாலததிலே திருக

† 'ஸதாநத்துறையை' எனறு பாடாநதரம.

‡ குண்டலிதக்ரந்தங்கள் சில பிரதிகளில காணப்படுகின றன.

காவேரியிலே எழுந்தருளாநிற்க, உடையவரும் முதலிகளுமாக எழுந்தருளி நம்பி ஸ்ரீபாதத்திலே தண்டனிட்டுக் கொண்டு கிடக்க, நம்பியும் அவரை எழுந்திருக்கச் சொல்லாமலிருக்க, கிடாம்பியாச்சானும் 'இதென்ன ஶிஷ்யாசார்யக்ரமந்தான்? கருமுகைமாலையை வெய்யிலிலே போகடுவார்களோ?' என்று பரிந்தெடுக்க, நம்பியும் 'உம்மைக் காணும் தேடுகிறோம், திருமேனிக்குப் பரிவர் நீராம், இன்று முதல் தளிகைக்குப் பண்ணி இவர்க்கு ஏகமாது₄ரமாக ப்ரஸாதியும்' என்று நியமித்தருள, கிடாம்பியாச்சானும் அப்படியே பண்ணி ஸாதித்துக்கொண்டு எழுந்தருளியிருந்தார்.

## அருளாளப்பெருமாளெம்பெருமானார் உடையவரை ஆச்ரயித்தல்

பின்பு, யஜ்ஞமூர்த்தியென்கிற மஹாவிதவானான ஒரு ப்ராஹ்மணன் கங்காஸ்நாநத்துக்குப்போய் அங்கு ஸ்நாநம் பண்ணி அங்குள்ள வித்வான்களை ஜயித்து அங்கே மாயாவாத₃ஸந்யாஸாஶ்ரமத்தையும் பரிக₃ரஹித்து வித்யையாலும் ஶிஷ்யஸம்பத்தாலும் மிகுந்தவனாயிராநிற்க, அவனும் அங்கே உடையவருடைய வைபவத்தைக் கேட்டு 'நாம் அங்கேறப்போய் அவருடனே தர்க்கிக்கவேணும்' என்று அநேக ஶாஸ்த்ரங்களையெழுதி க்ரந்தங்களையும் சுமைசுமையாகக் கட்டி எடுப்பித்துக்கொண்டு தன் வித்₃யாக₃ர்வமெல்லாம் தோற்றப் பெரியமதிப்புடனே அதிதவரையில் கோயிலேறவந்து உடையவரைப் பார்த்து என்னுடன் தர்க்கிக்கவேணும்' என்ன, இவரும் 'அப்படியே செய்கிறோம்; நீ தோற்றால் என்னசெய்கிறாய்?' என்ன, அவனும் 'நான் தோற்றேனாகில் உம்முடைய பாத₃ரக்ஷையைச்சுமந்து உம்முடைய பேரையுமிட்டுக்கொண்டு உம்முடைய ஸித்₃த₄ாந்

தத்திலே புகுரக்கடவேன்' என்ன, உடையவரும் 'நாம தோற்றோமாகில் கூரந்த₂ஸந்யாஸம் பண்ணித் தோற்றோ மென்கிறோமித்தனை' என்ன. அவனும் ஸம்மதித்து இப்படி அந்யோந்ய ப்ரதிஜ்ஞைபண்ணிக்கொண்டு பதினெட்டு நாள் அவதி₄யுமிட்டு இருவரும் ஒருவருக்கொருவர் தோலா மல் மத்தகஜங்கள் பொருமாபோலே தர்க்கிக்க, இப்படி பதினாறுநாள் ஒருவருக்கொருவர் தோலாமல் தர்க்கித்து அவனை ஜயிக்கப்போகாமல் பதினேழாம்நாள் அவனுடைய யுக்தி ப்ரப₃லமாக, இவரும் அதுக்குமேல் ஒன்றுந் தோன்றா மல் நிற்க, அவ்வளவிலே அவனும் தன்வெற்றிதோற்ற எழுந்திருந்து அறைக்குப் போக, இராமாநுசனும் வ்யா குலாந்த:கரணராய் மடமே எழுந்தருளித்தம் திருவாராதந மான பேரருளாளரையுந் திருவடிவிளக்கி அமுதுசெய்யப் பண்ணி, பெருமாளுடன் வெறுத்து 'பெருமாளே! ஆழ்வார் தொடங்கி ஆளவந்தாரளவாக இத்தனை காலம் ஓரான வழியாய் ப்ரதிஷ்டிதமாய் வந்த இத்தர்ஶநம் அடியேனைத் தோற்றித்தோற்கக்கடவதோ! இந்நாள்வரையில் தேவரீர் ஸ்வரூபரூபகுணவிபூ₄திகள் ஸத்யமென்று ப்ரமாணத்தை நடத்திக்கொண்டு போந்தீர், இப்போது ஒரு ம்ருஷாவாதி₃ யைக் கொண்டுவந்து என்னுடைய காலத்திலே எல்லா ப்ரமாணங்களையும் அழித்துப்போகட்டு லீலைகொண்டாடத் திருவுள்ளமாகில் அப்படியே செய்தருள' என்று விண் ணப்பஞ்செய்து தாமும்அமுதுசெய்யாமல் கண்வளர்ந்தருள, பேரருளாளரும் அன்று ராத்ரி இவர் ஸ்வப்நத்திலே எழுந் தருளி 'இளையாழ்வீர்! நீர் முசிப்பானேன்? உமக்கு ஸமர்த்தனாயிருப்பானொரு ஶிஷ்யனை உண்டாக்கித்தந்தோங் காணும்; உம்முடைய பரமாசார்யரான ஆளவந்தார் அருளிச் செய்த மாயாவாத₃க₂ண்ட₃நத்தைச் சொல்லி அவனை ஜயியும்' என்று அருளிச்செய்தருள, உடையவரும் விடிவோறே திருநாமோச்சாரணம் பண்ணியெழுந்திருந்து திருக்கண்களை விழித்து 'இதொருஸ்வப்நமிருந்தபடியென்' என்று மிகவும் திருவுள்ளமுகந்து ஸ்வப்நத்தில் அருளிச்செய்த யுக்தியைத்

தம் திருவுள்ளத்திலே கொண்டு எழுந்தருளியிருந்து, ஸந்தோஷத்துடனே நித்யகர்மாநுஷ்டாநஞ் செய்தருளித் தம் திருவாராதநமான பேரருளாளரையும் ஸேவித்துப் புறப்பட்டு ப்ரஸந்நகம்பீரமாய்க்கொண்டு தர்ககோஷ்டியிலே எழுந்தருள, அவ்வளவிலே அந்த வித்வானும் பூர்வஜந்ஞைகயாலே, உடையவர் எழுந்தருளுகிற காம்பீர்யத்தையும் ஸந்தோஷத்தையுங்கண்டு 'இவர் நேற்று இங்குநின்றும் எழுந்தருளும்போது சோம்பிக்கொண்டுபோனார், இப்போது மத்தகஜம்போலே இங்கே வராநின்றார்; ஆகையாலே இது மாநுஷமன்று; அதிமாநுஷ சேஷ்டிதமாயிராநின்றது' என்று நிஶ்சயித்து, சடக்கென எழுந்திருந்து எதிரேசென்று உடையவர் திருவடிகளிலே ஸேவித்து 'தேவரீருக்குத் தோற்றேன்' என்று ஸ்ரீபாதரக்ஷைகளை ஶிரஸாவஹித்துக் கொண்டு 'அடியேனை இரங்கியருளவேணும்' என்ன, உடையவரும் 'இதென்!' என்று திகைத்து 'தாககிக்கலாகாதோ?' என்ன, அவனும் உடையவரைக்குறித்து 'தேவரீருக்குப் பெரியபெருமாள் ப்ரத்யக்ஷமானபின்பு, தேவரீரென்ன பெரியபெருமாளென்ன பேதமில்லையென்று அறிந்தேன்; இனி அடியேன் தேவரீர் ஸந்நிதியில் வாய் திறந்து ஒருவார்த்தை சொல்லப் ப்ராப்தியில்லை' என்ன, உடையவரும் உகந்தருளி, 'ஆகிலும், நீர் சொன்ன மாயாவாதஸித்தாந்தத்திலும் ப்ரஹ்மம் நிர்க்குணமென்கையாலே அந்த ப்ரஹ்மத்திற்கு ஸத்யத்வாதி குணயோகங்களைச் சொல்லுகிற வேதவாக்யங்கள் அப்ரமாணங்களாய்விடும், அவித்யாதிரோஹிதமான ப்ரஹ்மத்துக்கு குணயோகமுண்டாகையாலே ஸகுணஶ்ருதியில் விரோதமில்லையென்றீராகில் அது கூடாது; எங்ஙனேயெனில்,— 357.

"ஜ்ஞாநரூபம் பரம் ப்ரஹ்ம தந்நிவர்த்யம் ம்ருஷாத்மகம்।
அஜ்ஞாநஞ்சேத் திரஸ்குர்யாத் க: ப்ரபுஸ்தந்நிவர்த்தகே॥"

என்கிறபடியே ஜ்ஞாநரூபமாயிருந்துள்ள பரப்ரஹ்மத்தை அஜ்ஞாநரூபமான அவித்யை மறைத்ததாகில் அந்த அவித்யைக்கு நாசமில்லையாகையாலே, அது நித்யமாய்விடும்,

வைத்துக கண்வளர்ந்தருள. ஓரிரவெல்லாம் துடைமாறுடு தல அசைத்தல செய்யாதே இருநதருளினா, ஆகையாலே. ஆசார்யவிஷயததிலே சைதநயம் மூச்சறறுப் படுககையாய அடிமைசெய்கை ஶிஷ்யஸவரூபஸித்தி யெனகிறது.

திருவணையாடி மீணடு எழுந்தருளுகிறபோது ஸாயங காலமானவாறே பாதிரியெனகிற கராமததிலே போய் ஒரு வேடனகததே எழுநதருளப்புககவாறே. அவனும தானி ருநத ஆஸநத்தையும வாங்கிபபோகட்டு இவர்கடு ஒரு கட்டிலை அமைததுககொடுகக, அதின மேலே எழுந்தருளி யிருந்து 'இவன நமமுடைய வைபவ மறிநது செய தானலலன, க்ஷயாதிபரனுய்ச் செய்தானலலன, நமமால உபகருதனுய்ச செய்தானலலன், தன னுடைய கருஹத திலே புகுநதோமென னும அபிமாநமிறே இவன இவ்வளவு செய்யவேண்டிறறு. ஈஶவரன தன அபிமாநததிலே ஒதுஙகினுரை என ன நினைததிருககிருனே?' என்று அநு ஸநதிததருளி, பினபு அநதக்ருஹமுடையவனைக குறிதது 'இங்கு விஶேஷம எது?' எனறு கேட்டருள, அவனும 'நாயனதே! நான காட்டிலே வேட்டைககுப போனேன், அஙகே ஒரு முசல குட்டியைப் பிடிததேன, அதனுடைய தாயானது என முனனே வநது வழியிலே எதிரே கும் பிட்டுககொண்டு கிடநதது, அதைக்கண்டு எனககு தயைபிறநது அதினகுட்டியைவிட்டுபபோந்தேன்' எனறுன அத்தைககேட்டு இவரும் 'ஒரு சேதநனுக்கு இல்லாத தொனறு. பரமசேதநனுககு உள்ளதொன்று! 536. "மா மேகம் ஶரணம வ்ரஜ' எனறு அமமுசலுக்கு உபதேஶித் தாருமிலலை, 537. "அரி பராணுந் பரிதயஜய ரக்ஷித வ்ய கருதாதமநா" எனறு இவ்வேடனுக்கு உபதேஶித தாருமிலலை, அவ்யவதாநேந ஶரணுகதி பலிப்பதே! இதொரு ப்ரமாணஸிததி இருந்தபடியே!' எனறு நஞ்சீயர்கடு அருளிச்செய்து. கோயிலுககு எழுநதருளிய பூாவம போலே வ்யாக்யாநித்துக்கொண்டு எழுந்தருளியிருநதார்.

அககாலத்திலே வீரஸுந்தரப்ரஹ்மராயன பெருமா ளுக்குத திருமதிள் கட்டுவிககிற நேரிலே பிள்ளைபிளளை யாழவான திருமாளிகை யகபபட, 'அவா திருமாளிகையை இடிததுத் திருமதிள்கட்டவேணும' எனறு வீரஸுந்தரன சொலல, படடரும் 'உம திருமதிளோ பெருமாளுககு ரக்ஷகம? அவா மஙகளாஸாஸநமிறே ரக்ஷகம, ஆகையாலே, முனபு திருமஙகையாழவார் தொணடரடிபபொடியாழவாா திருமாலை கட்டுகிற ஸதாநததைத் தபப ஒதுங்கத் திரு மதிள் கடடவிலலையோ? நீரும் இபபோதும அபபடியே அவர்திருமாளிகையை விட்டு ஒதுஙகத திருமதிள கட்டி வையும' எனறு சொலல, வீரஸுந்தரனும ஆசாரயபுத்ர ரெனறு அஞ்சாதே அவர் வார்த்தையை அதிகரமிதது ஆழ்வான திருமாளிகையை இடிததுத திருமதிள கட்டி வைதது பட்டரைத தநமூலமாகக கோயிலிலேயிருககவு மொட்டாதே மிகவும் உபத்ரவிகக, படடா கோயிலினின றும புறபபடடுத திருக்கோட்டியூருககு எழுநதருளும போது வழியிலே இளைததருளி 'நஞ்சீயா இபபோது வருவதுஙகாணேன்' என்ன, நஞ்சீயரும் 'சீயா! சீயா!' எனறு அழைத்துக்கொண்டு கட்டுத்திருப்போனகமும் தண்ணீரமுதும கொண்டு ஓடிவந்து சடககென அமுது செயயப பணணிவைத்து இளைப்பாறறிவைகக, பட்டரும் நஞ்சீயருககு அப்போதும் ஒரு விஶேஷகடாக்ஷஞ் செய் தருளினா், ஆகையாலே, அநுவாததந விஶேஷஙகளாலே ஆசாரயாநுகரஹததிறகுப பாதரமாக வேணுமிறே.

அநநதரம திருககோட்டியூரிலே எழுநதருளியிருநது

538. "பூகீ₃கணட₂ த₃வயஸஸரஸஸநிக₃த₄ நீரோபகணட₂ா மாவிாமோத₃ ஸதிமிதஶகுநாநூதி₃தப₃ரஹ்மகே₄ாஷாம। மார்ககே₃ மாாககே₃ பதி₂கநிவஹைஹருஞசயமாநாபவர்கக₃ாம பஶயேயம தாம புநரபி புரீம் ஸ்ரீமதீம ரஙக₃த₄ாமந॥"

எனறு சொலலிககொண்டு, கோயிலையும் பெருமாளையும விட்டுப பிரிந்திருககையாலே மிகவும் கலேஶபபட்டு

'* என்று கொலோ கண்குளிரக் காணுநாளே!' என்று கொண்டு எழுந்தருளியிருக்கிற காலத்திலே, ஒரு ஸ்ரீவைஷ்ணவர் பட்டரை ஸேவித்து 'அடியேனுக்குத் திருவிருத்தத்திற்கு அர்த்தம் ஒருரு ப்ரஸாதித்தருள வேணும்' என்று மிகவும் அநுவர்த்திக்க, பட்டரும் நஞ்சீயரைப் பார்த்து 'சீயா! எனக்குக் கோயிலையும் பெருமாளையும் விட்டுப்பிரிந்த க்லேஶாதிஶயேந செவிகள் சீப்பாயாநின்றது, ஆகையாலே, எனக்கு வாய்திறந்து வார்த்தை சொல்லப்போகிறதில்லை, நீர் திருவிருத்தத்திற்கு அர்த்தம் ஒருரு இந்த ஸ்ரீவைஷ்ணவருக்குச் சொல்லும்' என்று அவரைச் சீயர் ஸ்ரீபாதத்திலே காட்டிக்கொடுத்து இங்ஙனே நடந்துசெல்லுகிற நாளிலே, கடலைக் கலக்கினாற்போலே பட்டர் திருவுள்ளத்தைக் கலக்கி விரோதித்த வீரஸுந்தரன் மரித்துப்போக,

அவ்வளவிலே கோயிலிலே பட்டர் திருத்தாயார் ஆண்டாளை ஸேவித்திருந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் 'பட்டருடைய விரோதி போனான்' என்று தங்கள் திருப்பரியட்டங்களை முடிந்து ஆகாஶத்திலே யெறிந்து, நின்றார் நின்ற திக்கிலே ஸந்தோஷித்துக் கூத்தாடி ஆண்டாளுக்கு அறிவிக்க, அது கேட்டு ஆண்டாள் செய்தபடி.— திருமாளிகைக்குள்ளே புகுந்து திருக்காப்புச்சாத்திச் சிக்கெனத் தாளிட்டுக் கொண்டு வயிறுபிடித்து மிகவுங்க்லேஶித்து வாய்விட்டு உச்சைஸ்ஸ்வரமாக அழத்தொடங்கினாள்; அதுகேட்டு ஸந்தோஷாதிஶயேந * தடுகுட்டமாய்க் குமபிடுநட்டமிட்டுக் * கூத்தாடுகிற முதலிகள் ஆண்டாளைக்குறித்து 'பட்டரை இங்கு இருக்கவுங்கூட வொட்டாமல் விரோதித்த பாபிஷ்டன் போனானென்று ஸந்தோஷியாதே க்லேஶிப்பானேன்? பட்டருடைய விரோதி போகவும், பட்டரும் முதலிகளும் இங்கே எழுந்தருளவும், நாமெல்லோரும் கூடிவாழவும், உமக்கு அஸஹ்யமாயிருந்ததோ?' என்ன, ஆண்டாளும் ஸ்ரீவைஷ்ணவர்களைக் குறித்து அருளிச்செய்தபடி·— 'பிள்ளைகாள்! நீங்களொன்றும் அறிகிறிகோளில்லை, வீர

ஸுந்தரன நேரே ஆழவானுடையஶிஷ்யனுயிருந்து ஆசார்ய புதரரான பட்டரைத திண்டாட்டங்கண்டு அவர் திறத திலே மஹாபராததைத் தீரககழியபபண்ணி 'அறியாமல செய்தேன, இதனைப பொறுத்தருளவேணும்' என்று பட்டர் திருவடிகளிலே தலைசாய்ப்பதுஞசெய்யாதே, 'இப்படி செய்தோமே!' என்கிற அநுதாபமுமின்றியே செத்துப் போனுன, ஆகையாலே, அவன ஶரீரமவிட்டபோதே யம படா கையிலே யகப்பட்டுக் கலங்க அடியுண்டு மலங்க விழிககுமாகையாலே அதருஷ்டத்தை யிழந்தான், சில நாளைக்கு இருந்தாகிலும் த்ருஷ்டஸுகததை யநுபவிக்கிறு னென றிருந்தேன, அதுவுங்கூட இழந்தானுகாதே? ஆழ வான் திருவடிகளில் ஸம்பந்தமுடையது ஒரு ஆத்மா இப்படி தட்டுப்பட்டுப்போவதே! என்று இத்தை நினைத்து என வயிறு எரிகிறபடி உங்களொருவர்க்கும் தெரிகிறதில்லை' என்று ஆண்டாள் அருளிச்செய்தாள், குற்றஞ்செய்தவர் கள்பக்கலிலும் அகப்பட ஹிதபரராய் துயார்த்ரசித்த ராய்ப்போருவது, ஆழவான ஸம்பந்தமுடையவர்களுக்கே உள்ளதொன்றிறே.

கோயிலிலும் பிள்ளைபபிள்ளையாழ்வான் இவ்விஶேஷங் கேட்டுத் திருககோட்டியூருக்கு எழுந்தருளி இத்தை அருளிச் செய்ய, பட்டரும் கேட்டு ஸந்துஷ்டராய் "நுங்கால்க ளென தலைமேற கெழுமீரோ நுமரோடே" என்கிறபடியே அவர்கழல்களை அடிககடி வணங்கி, அவருடனே கூடத் தத்க்ஷணமே கோஷ்டீபுரததிலும் புறப்பட்டுக் கோயிலேற எழுந்தருளி, பண்டுபோலே தர்ஶநார்த்தம நிர்வஹித்துக் கொண்டிருந்தார்.

அம்மணியாழ்வான் இருநூறுகாதவழி நடந்து வந்து, பட்டர் ஸ்ரீபாதத்திலே தண்டனஸமாபபிதது 'அடியே னுக்குத் தஞ்சமாயிருப்பதொரு அர்த்தம் ப்ரஸாதித்தருள வேணும்' என்று ப்ரார்த்திக்க, பட்டரும் நெடுமாற்கடி

மைக்கு ஆத்மம பரஸாதிததருளி, எமபெருமானை அறிகை யாவது - அவனை அரைவயிறு படடறிகை, ததீ₃யரை அறி கையாவது - அவனை முழுகக அறிகை' எனறு அருளிச் செயதருள, அவரும 'பலபடி சொலலியென? மறபடீன, இவ்வளவேயமையும்' எனறு அதுதனனையே த₄ாரகமாகப பண்ணிககொணடு எழுநதருளினா, 538. 'நயக₃ரோத₃ பீ₃ஜே வடவத பரணவே ஶப₃த₃ஜாலவத| ஸித₃தே₄ ததீ₃யஶேஷதவே ஸாவாாத்₂தாஸ ஸமப₄வநதி ஹி||" என கையாலே ஸ்சசி₂ஷயன ஸந₃₃ாசாாயன அருளிச்செய்த தொரு சரமாாததததையே தஞசமெனறு விஶவஸிகக வேணு மெனறபடி.

வீரஸுிகாமணிப பலலவராயன, பட்டரைககுறிதது 'பட்டரே ! ராஜகார்யஞ் செய்கையாலே அடியேனுககு ப₄க₃வத்விஷயவைபவங் கேடக விரகிலலை; எனக்குத் தஞச மாயிருப்பதொரு அர்ததம் பரஸாதித்தருளவேணும்' எனறு அபேக்ஷிகக, பட்டரும் 'கடற்கரைவெளியை நினைத்திரும' என்று அருளிச் செய்தருள, அது தெரியாமையாலே அவன கையைப்பிசைந்துநிறக, இவரும 'கடறகரையிலே ஒரு அமருதக்கடலபோலே பெருமாள் பெரிய வாநர ஸேனையோடே விட்டிருகக, அக்கரையிலே பிணாநினனிப் பையல் ராவணன இருகக, எழுபதுகோடி மஹாகபிஸேனை உணர்ந்து பெருமாளைக் குறிககொண்டு நோககிக் கொண்டு போர, அவாகள் பரகருதிமாங்களாகையாலே கணணுறங்கிக் காலோய்ந்து கைசோாநதவளவிலே, தாமும் தம திருத் தம்பியாருமாகத திருவரையிறகட்டிய கச்சும சுருககிய சீராவும் நாணியும் முதுகிலே அமபாூததூணிகட்டிக கை யிலே தெறிததுப் பிடித்துப் பெருககின திருச்சரமும் தரிதத திருவில்லும் தாமுமாய், சில அண்ட₃ஜங்கள் முட்டையிட்டுத் தம் சிறகினகிழே நோககிட்டு வைககுமா போலே எழுபதுவெள்ளம பலவஙக₃ குலபதி மஹாஸேனை யையும் நடையாடும் மதிள்கள்போலே ரக்ஷித்துக்கொணடு

ஓரிரவெல்லாம் சாரிகையாய்வந்த சக்ரவர்த்தித்திருமக னுடைய கையும் வில்லுமே தஞ்சமென்று ஸுகமாயிரும்' என்று அருளினார். தர்ஶநரஹஸ்யமாவது - உறங்குகிற போது நம்மை ரக்ஷிக்குமவன், உணர்ந்தால நம்மை நோக்கு மென்றிருக்கச் சொல்லவேண்டாவிறே யென்றபடி.

ஒருநாள் த்ரிபு$_4$வநவீரதே$_3$வராயன், பட்டருடைய வைபவங்கண்டு 'பட்டரே! நீர நம்பக்கல ஒருநாள் வந்து போகீர' என்ன, பட்டரும் 'பெருமாள் அஞ்சலென்ற கை மறுத்தாலும், அவ்வாசலொழிய வேறொருபோக்கு உண்டோ?' என்று அருளினார். அதாவது - 540. "ஏதத்$_3$ வ்ரதம மம" என்று ஸவாஶ்ரித ரக்ஷணதீ$_3$க்ஷிதனை எம்பெருமானிருக்க, கதிபய க்ஷுத்ரமேஶ கஶ்சித் புருஷாத$_4$ மன வாசலிலே துவளக்கடவோமல்லோ மென்றபடி.

ஒருநாள் பட்டர், பெருமாளைத் திருக்கைத்தலத்திலே எழுந்தருளியிருக்கச்செய்தே திருவடிதொழப்புக, திருமுன் அடிக்கிற வேத்ரபாணிகள் பட்டரைப்பாராமல சில பரு ஷோக்திகளைச சொல்ல, ஸ்ரீபாதத்தில ஸ்ரீவைஷ்ணவர் அவரோடே எதிருத்தரஞ்சொல்லப்புக, பட்டரும 'வாரீர பிள்ளாய்! கேளும். பெருமாளுக்கு ஏகாந்தத்திலே என குற்றம விண்ணப்பஞ்செய்ய ஒருகாலம் பெற்றேனாய், பெரு மாளும் திருச்செவிசாத்தாமல்போந்த இத்தைப் பெரு மாளுக்கு அந்தரங்க பரிகரமாயிருப்பாரொருவர் நம தோஷத்தை ஏகாந்தத்திலே விண்ணப்பஞ்செய்ய, பெரு மாளும திருச்செவிசாத்தினது கண்டால், நம்மைப்பாக்கில அத்தை விலக்குகிற இத்தால நீர்பெற்றபேறு என?' என்று அருளினார்; இத்தால, பகவத் ஸந்நிதியில் ஏகாந்தத்தில பரக்ருத ஸ்வதோ$_3$ஷக்$_2$யாபநம் தத்$_3$வாத்ஸல்யகார்யமாயத் தத$_3$ங்கீ$_3$காரஹேதுவுமாமென்று நினைக்கக்கடவனென்றபடி.

பட்டர் ஸ்ரீபாதத்தில ஸம்பந்தமுடையராய் ஸோம யாஜியாயிருப்பாரொரு ஸ்ரீவைஷ்ணவர், பட்டரை 'அடி

யேனுக்குத் திருவாராதநக்ரமம் பரஸாதித்தருளவேணும்' என்று விண்ணபபஞ்செயய, பட்டரும உடையவா நித யத்தை—ஒருயாமபபோது திருவாராதநம பணணவேணடுங் க்ரமதத்தை—பரஸாதிததருள, அவரும் அதுகொண்டு நெடு நாள் திருவாராதநம்பண்ணிப போரசசெய்தே, ஒன்றிரண்டு நாள் பட்டர்திருவாராதநத்தை ஸேவிததிருகக, அஙகுத தமககு அருளிச் செய்த க்ரமம ஒன்றும கண்டிலர். பட்டா திருவாராதநஞ்செய்தபடி.—பட்டர் நீராடித தூய திருப்பரி யட்டஞ் சாததியருளித திருமண்காபபுச் சாததியருளி, உள்ளே அமுதுசெய்யத் தளிகையை அமர்த்தினவளவிலே தளிகைமுனனே எழுந்தருளியிருந்து 'தெறகாழவாரை எழுந்தருளுவித்துககொண்டு வாருங்கோள்' என்ன, அவர் களும அபபடியே எழுந்தருளுவித்துக்கொண்டுவந்து கைத் தலத்திலே பிடிக்தவளவிலே, தமககுப் படைதத திருப போனகததையும் சேர்த்த தண்ணீரமுதையும் அமுதுசெய் விததருளி பரஸாதப்பட்டருளினா. அததைக கண்டு ஸ்ரீவைஷ்ணவரும் பட்டரைத தண்டனிட்டு ஸவிநயராய் 'ஒருவிண்ணப்பமுண்டு, சொல்ல பயமாயிருககிறது' என்று சொலல, பட்டரும 'அஞ்சாதே சொலலும' என்ன, அந்த ஸ்ரீவைஷ்ணவரும் 'திருவாராதநப்படியை அடியே னுக்கு இப்படி அருளிச்செய்தருளிற்று, தேவரீா இபபடி செய்தருளுகிறது; இதறகு அடியென?' என்று விண்ணப பஞ்செய்ய, படடரும் 'ஸகல ஶாஸ்தரஙகளேயும ஆராய்ந்து பார்த்தவிடத்து உமக்கு அபபடியொழியச் சொலலுகைக்கு ஒருவாாததை கணடிலேன, என்னை நிரூபிததவிடததில இபபடியொழியச் செயகைககு ஒருசொல கண்டிலேன' என்று அருளிசசெய்தருளினா, ஹிதைஷியான ஆசார் யன் ஶிஷ்யனுக்கு ஜ்ஞாநபரிபாகாநுகுணமாகக கொண்டிப் பசுவுககுத தடிகட்டி விடுவாரைப் போலே ஶப்₃த₃ாதி₃ விஷயங்களிலே மண்டிததிரிகிற கரணங்களை பகவத விஷய பரவணமாம்படி திருதது மென்னுமதுவும், ஆசார்ய

னுடைய யதநமாய் பகவதவிஷயைகபரமான அநுஷ்டாந விஶேஷததிறகுக் கருதது அவிஶேஷஜ்ஞர்ககுத தோறறு தெனனுமதுவும தோன்றுநின்றதிறே

பட்டரை ஒருவன 'தேவதாந்தரஙகளை ஸ்ரீவைஷ்ண வர்கள் அநுவாததியாதொழிவானென?' எனன, 'ப்ராமண விரோத முண்டாகிலன்றோ ஸந்தேஹமுள்ளது, இங்கே ஸநதேஹமிலலை' எனறு அருளிச்செய்தார். அது எங்ஙனே யெனனில்:— 'ஸதவபரசுரரை ரஜஸ்தம பரசுரா அநுவர்த் திககுமது போக்கி ஸத்வப்ரசுரர் ரஜஸ்தம:ப்ரசுரரை அநுவர்த்திககககடவதோ?' எனறு அருளிச்செய்தார, ஆகையாலே, தேவதாநதரங்கள் குண தோஷங்களிரண்டா லும ஒருகாலும் அநுவர்த்தநீயரனறெனறபடி.

'பட்டா அறியில் ஸமமதியார' என்று, பட்டா ஸ்ரீபாததவதை வேறொரு ஸ்ரீவைஷ்ணவா திருக்கையாலே விளககுவிதது, ஆண்டாள் ஸ்வீகரிபபள. இதவதை ஒரு ஸ்ரீவைஷ்ணவா கண்டு 'நீர் தாயாராயிருநது இபபடி செய்தருளலாமோ?' எனன, ஆண்டாளும 'அது என? பிறர்திருவாராதநததின தீரத்தமே ஸ்வீகார்யமாய், தான ஏறியருளப் பண்ணின விகரஹத்தின தீர்த்தம் ஸ்வீகாரய மாகாதோ? எனன, அவரும 'அதறகு அடியென? எனறு கேடக, ஆண்டாளும '* கணபுரமகைதொழுமபிள்ளையை பிள்ளையெனறெணணப பெறுவரே?' எனறு அருளிசசெய் தாள். இத்தால, ஶிஷ்யபுத்ரர்களேயாகிலும், ஜ்ஞாநாதி₄கர் ததீ₃யதவேந அநுவாததநீயரெனறபடி.

பட்டா, தம ஸ்ரீபாதத்திலே ஸேவித்திருப்பார ஒரு ஸ்ரீவைஷ்ணவரைபபாரதது 'நீர அநந்தாழவான் ஸ்ரீபாதத திலே சென று ஸ்ரீவைஷ்ணவலக்ஷணமிருககும்படி எங்ஙனே யென று கேட்டுவாரும்' எனறு அருளிச்செய்ய, அவரும் அநந்தாழவான ஸந்நிதிககு எழுநதருள, அனறு அஙகே

பல ஸ்ரீவைஷ்ணவர்கள் அமுது செய்தருள, இவரும் இடம் போதாமையாலே அவர்கள் அமுதுசெய்து எழுந்திருக்குமளவும் பேசாதிருக்க, பின்பு அநந்தாழ்வானும் இவரைக்கண்டு 'நெடும் போதுண்டே! அமுது செய்தருளப் பெற்றதில்லையே! இளைப்போடே யிருக்கிறதே!' என்று போர நொந்து சடக்கென அமுதுசெய்தருளப் பண்ணி, தாமும் தேவிகளுமாக ஸேஷித்திருந்த திருப்போனகத்தை அமுதுசெய்தருளி எழுந்தருளியிருந்து, ஸ்ரீவைஷ்ணவரைக் குறித்து 'எங்குநின்றும் எழுந்தருளிற்று ?' என்று கேட்டருள, அவரும் 'பட்டர், தேவரீர் ஸ்ரீபாதத்திலே சென்று ஸ்ரீவைஷ்ணவலக்ஷணமிருக்கும்படி எங்ஙனே யென்று கேட்டுவரச்சொல்லி வரவிட்டருளினார்' என்று விண்ணப்பஞ்செய்ய, அநந்தாழ்வானும் 'ஆகில, † (கொக்குப் போலேயிருக்கும், கோழிபோலேயிருக்கும், உப்புப்போலே யிருக்கும்.) உம்மைப்போல யிருக்கும்' என்று அருளினார்; இத்தால, தன் ஜ்ஞாநாநுஷ்டா₂நாபி₄மாநாதி₃நிமித்தமாக ஸ்ரீவைஷ்ணவர்கள் திரளிலே முற்பாட்டுக்கு ஆசைப படாதே, பிற்பாட்டுக்கே ஆசைபபட்டுத் ததீ₃யஸேஷத்வத்தைப்பேணுகை ஸ்ரீவைஷ்ணவலக்ஷணமென்று உத்தரமருளிச்செய்து விட்டாராய்த்து.

ஒருநாள் பட்டர் ஸ்ரீபாதத்திலே ஸேவித்திருப்பார் ஒரு ஸ்ரீவைஷ்ணவர் ஸஹவாஸ தோஷத்தாலே கலங்கி விஷயப்ராவண்யந தலையெடுத்து, பட்டர் ஸந்நிதியிற் சென்று 'பட்டரே! உமக்கும் நமக்கும் பணியில்லை' என்று சொல்ல, பட்டரும 'வாராய்பிள்ளாய்! அது உன் நினைவாலேயன்றோ, நீ விட்டாலும நாம் விடுவோமோ?' என்று அருளிச்செய்தருள, அவனும் அகன்றுபோகத்தேட, இவரும் அவனைப் ப₃லாத்கரித்துப்பிடித்து உபாயேந ஜ்ஞாநோபதேஶமுகத்தாலே வருந்தித் திருத்தி ஸ்ரீபாதத்திற்கு அந்தரங்கராக்கிக்கொண்டருள, அவரும் மஹாவிரக்தராய்

† குண்டலிதக்ரந்தம அநேகப்ரதிகளில இல்லை.

நிலையிலே நின்றருளினர். ஆகையாலே, அஜ்ஞாநம் தலை யெடுத்து அகன்று போவாரையுமுடபட விடாதே யதநேந திருத்திச் சேர்த்துக கொள்ளுகையே ஸத்₃ாசார்ய லக்ஷண மெனகிறது.

ஒருநாள், பட்டரும் ஸ்ரீவைஷ்ணவர்களுமாகப் பெருங் கூட்டத திருவோலக்கமாக எழுந்தருளியிருந்து பகவத கல்யாணகுணநுஸநத₄ாநம நடவாநிறக, ஒரு ஸ்ரீவைஷ்ண வர் 'நாம் பண்ணின ஸுக்ருதமன்றோ இப்படியிருக்கப் பெறறது!' எனன. அவ்வளவிலே சிறியாசசான் எழுந் திருந்துநினறு 'நெடுங்காலம் பெருமாள் ரக்ஷகரென்று ஶிக்ஷித்துவைதது. இபபோதாக ஒரு ஸுக்ருதத₃ேவருண்டா வதே!' எனறு அருளினர், இத்தால் உஜ்ஜிஜீவயிஷுவான ஈஶ்வரனிருகக, ஆநுகூல்யங்களுக்கு ஸுக்ருதம் அடி யெனகை ஸ்வரூபநாஶ மெனறபடி.

பட்டரோடே அமுதனர் வெறுததருளி 'தாம ஆழ்வா னுடைய வெறறிலைச் செருககிலே பிறநதவர், நான ஆழ்வா னுடைய ஜ்ஞாநச்செருககிலே பிறந்தவனனறோ?' எனறு சொலலிவிட, அததை பட்டர் கேட்டருளி 'பாசுரம் அழகிது. ஆகிலும், இத்தைதத தாமே சொனனரே!' என்று அருளிச்செய்தார்; ஆகையாலே, ஆசார்யாபி₄மாநஜநித ஸ்வோத்கர்ஷரூப † ஶ்லாக₄ாவசநம ஸ்வரூபாநுசித மென்றபடி

ஒருநாள் பெருமாள புறப்பட்டருளி ஒரு திருமண்ட பததிலே எழுநதருளியிருககச்செய்தே பட்டர் திருவால வட்டம் ஸேவித்திரா நிறக, ஸ்ரீபாதததுமுதலிகள் 'ஸந்த்₄யா வந்த₃நத்திறகுக காலம தப்புகிறது' என்று விண்ணப்பஞ் செய்ய, பட்டரும் 'பகவத்கைங்கர்ய நிரதருககு ஸந்த்₄யா வந்த₃நவைகலயதோஷம் வாராது' எனறு அருளிச்செய் தருளினா, இதற்குககருத்து'— 541. "மதகாம குர்வதாம

† 'ஸ்வவாக்₃வ்யவஹ்ருதவசநம்' என்று ப்ரதிபேதம்.

புமஸாம கர்மலோபோ ப₄வேத்₃யதி₃। ததகர்ம தே ப்ரகுர் வநதி நிஸர கோடயோ மஹர்ஷய ||" என்று திருமுகப் பாசுரமிருக்கையாலே, பகவத் கைங்கர்யத்தையிழந்து நிதய கர்மாநுஷ்ட₂ாநார்த்த₂மாகப போகை ஸ வ ரூ ப வி ரு த் த மென றபடி.

ஒருகால பட்டருடனே அநேக விதவான்கள் திரண்டு வந்து தர்கசிகக, பட்டர் அவர்களெலலாரையும் வாய் மூடுவித்து ஜயித்தருள, பின்னையும் அவர்கள் 'இவருடைய ஸர்வஜ்ஞதையைப் பரீக்ஷிப்போம்' என்று ஒரு குடத்திலே ஒரு பாமபை யடக்கிக்கட்டி 'இக்குடத்திலேயிருககும் வஸது என்?' என்று கேட்க, பட்டரும் 'திருவெண கொற்றைக குடை இருககிறது' என்ன, அவர்களும சிரித்துக் குடத்துக்கட்டை அவிழத்துவிட்டவளவிலே போ₄கி₃ புறபபட, அவர்களும் 'இதுகொற்றக் குடையோ' எனன, பட்டரும 'அனறோ? "சென்றால் குடையாம்" எனறனறோ ஆழ்வார் அருளிச்செய்தது' எனன, அவர்களும் இவரு டைய ஸர்வஜ்ஞதைககு விஸமயபபட்டு கருதார்தத₂ராய்ப போனார்கள்.

முனபு உடையவர் காலததிலே ஆசார்யர்களெல்லாரும் உடையவருக்கு மாநஸபுதரரான திருககுருகைப்பிரான பிள்ளானை அநுவாததிதது 'ஆழ்வார்களருளிச் செயல களின் அரும்பொருள் தெரியும படிககுத தேவரீர் வ்யாக யாநஞ் செய்தருளுமபடி உடையவரை வேண்டிக்கொள்ள வேணும்' எனறு பிள்ளானுக்கு விண்ணப்பஞ்செய்ய, பிள்ளானும் உடையவா பெருங்கூட்டத்திருவோலககமாக எழுந்தருளியிருக்கசசெய்தே ஸாஷ்டாஙகப்ரணாமம் பண்ணி ஸவிநயராய் இரப்புடனே 'ஒருவிண்ணப்பமுண்டு' என்று சொல்ல, உடையவரும 'என?' எனறு கேட்டருள, பிள் ளானும் 'தேவரீா ஸ்ரீபாஷ்ய மருளிச்செய்து திக்விஜயம் பண்ணி தர்மநதை நிலைநிறுத்தியருளிறறு, இனி திரு

வாய்மொழி முதலான ஆழ்வார்கள் திவ்யப்ரபந்தங்களுக கும வ்யாகயாநமசெய்து ரக்ஷித்தருளவேணும்' என்று விண்ணப்பஞ்செய்ய, உடையவரும் திருவுள்ளத்திலே, விசாரித்தருளி 'அப்படியாம்; நாம் அருளிச்செயல்களுக்கு வ்யாகயாநம் பண்ணிலை, மநதமதிகளுககு இதறகு இவ் வளவிலே அர்த்தமுள்ளதென்று தோற்றும், ஆகில், அப சாரமாம்; ஆழவாாகள் பாசுரஙகளுககு அவ்வவருடைய புத்திககு ஈடாக ப₃ஹு₂வாகச் சுரககும ; ஆகையாலே, நாம் அருளிச்செயலகளுக்கு வரமபு கட்டினபபோலேயாம், நீர் ஒருபடி திருவாய்மொழிக்கு வ்யாக்யாநஞ்செய்யும்' என்று நியமிததருளினர். திருககுருகைபபிரான் பிள்ளானும் யதி ராஜரநுமதிகொண்டு ஸ்ரீவிஷ்ணுபுராண ப்ரகரியையாலே திருவாய்மொழிக்கு முந்துற முனனம இனிதாக ஆறுயிரப படி உரைததருளினர் பட்டரும் நஞசீயருக்குப் பிள்ளான படி ஆறுயிரமும் நனறாக ப்ரஸாதித்தருளினர்.

நஞ்சீயரும அத்தை நன்றாக அதி₄கரிதது, பட்டரை அநேகமாக அநுவாத்திதது அவருடைய அநுமதிகொண்டு திருவாய்மொழிககு ஒன்பதிநாயிரப்படியாக ஒருவ்யாக்யாநம் பண்ணுகிறகச்செய்தே, பட்டருக்கு இருபத்தெட்டாந்திரு நக்ஷதரத்திலே ஒருகைஶிகத்வாதஶியினன்று பெருமாள் ஸந்நிதியிலே நின்று கைஶிகபுராணம்வாசித்தருளாநிற்க, எனறையும் போலனறியே ஒரு பதத்திலே நினறு ப₃ஹு₂ முகமாக பூ₄ர்வார்த்த₂ங்களை அருளிச்செயகிறபடிகளைக கண்டு, பெருமாள் திருவுள்ளம்பறறி யுகநது இவருககுத தாம் சாத்தியிருந்த திருமாலை திருப்பரியட்டம திருவா பரணம் முதலானவறறையும் தாம எழுந்தருளியிருக்கும திவ்யஸிம்ஹாஸநத்தையும் பினனையும சிலவற்றையும் பரிசி லாக இரங்கியருளி, மார்புந் தோளும் பூரித்துக திருமேனி தெரியாமல் த்வரைவிஞ்சி மாறி 'இவாககு மறறு எது கொடுப்போம?' எனறு, ஸநதோஷாதிஶயததாலே 'பட்டரே! உமக்கு மேலைவீடு தந்தோம' என்று திருவுள்ள

மாக, இவரும் 'மஹாப்ரஸாதம்' என்று அங்கீகரித்தருள, திருவோலக்கமடையக் கடலகுமுறுப்போலே 'இப்படி திருவுள்ள மாவானென?' என்று கலங்கி வயிறு பிடிக்க, பட்டரும் ஹாஷபரகாஷத்துடனே பெருமாள் திருவடிகளிலே தண்டன் ஸமர்ப்பித்து கருதாஞ்ஜலிபுடராய் நின்று கொண்டு 'நாயனதே! தேவரீர் அர்ஜுநனைக் குறித்து 542. "மோக்ஷயிஷ்யாமி" என்று அருளிச் செய்தருளிற றென்று கேட்பாரவார்த்தை கேட்டிருக்கையன்றிக்கே, தேவரீர் தாமே இப்படி திருவாய்மலர்ந்தருளப்பெற்ற இப்பேற்றுக்கு அடி - உடையவர் தேவரீர் திருவடிகளிலே காட்டிக்கொடுத்த உறவும், ஆழ்வாரோடு உண்டான குடல் துடக்கும், எம்பாரருளுமிறே' என்று விண்ணப்பஞ்செய்ய திருவோலக்கத்திலிருந்த ஸ்ரீரங்கமறையோர் பட்டரைப் பார்த்து 'பெருமாள் உகப்புத் தலைமண்டையிட்டு விசாரியாமல ஒரு வார்த்தை அருளிச் செய்தருளினார்; நீர் இங்ஙனே உகந்து அங்கீகரிக்கிறதென்? உம்மைக் கொண்டு இவ்விபூதியைத் திருத்தவேணு மென்றன்றோ பெருமாள் திருவுள்ளம் பற்றியிருக்கிறது' என்ன, பட்டரும் 'ஆனால் - இவ்விபூதியும் இவ்விபூதியிலுள்ளாரும் ப்ராக்ய ஹீநரானால். அடியேன் செய்வதென? நாய்க்குடலுக்கு நறுநெய் தொங்குமோ? என்னை இவ்விபூதிபொறுக்குமோ? இன்னம் சிறிது நாள் இங்கே அடிமை கொண்டருளில், பரமபதத்திற்கும் இதுக்கும் சுருளும்படியுங் கட்டேனோ?' என்று பெருமாள் தம்மை விஶேஷகடாக்ஷஞ்செய்தருளின ராஜகுலமாஹாத்மயத்தாலுண்டானசெருக்குத் தலைமண்டையிட்டு ஹ்ருஷ்டோக்தியைப் பண்ணி, 'நாயன்தே! ஆஸநபத்மத்திலே அழுத்தியிட்ட திருவடித்தாமரைகளும் அஞ்சலென்ற கையும் கவித்த முடியும் முறுவல பூரித்த சிவந்த திருமுக மண்டலமும் திருநுதலில கஸ்தூரித்திருநாமமும் பரமபதத்தில கண்டிலேனாகில, ஒரு மூலையடியே முறித்துக் கொண்டு குதித்து மீண்டு வருவேன்' என்று விண்ணப்பஞ்செய்து, நம்பெருமாளையும் பெரிய பெருமாளையும

ஆபாதசூடம அநுபவித்து, கோயிலாழவாரையும் ஆழ்வாரை யும கண்ணார ஸேவிதது நிற்க. பெருமாள் தம் வரிசைக ளெலலாவறறுடன ப்₃ரஹ்மரத₂ம் பண்ணுவித்து, கோயில அனைத்துககொததும் அகில ஸ்ரீவைஷ்ணவாகளும் எலலா ஆசாரியர்களும் மற்றுமுள்ள விப்ரவர்ககம் சூழந்து ஸேவிததுவர, அவா திருமாளிகையிலே எழுநதருளி ஆணடாளை ஸேவித்துநிறக, அவரும் ' * நலமந்தமிலல தோர்நாடு புகுவீர' எனறு ஆஶீாவதிகக. பட்டரும் '*அம்மா! அடியேன வேண்டுவ தீதே' எனறு உகந்தருளி,

திருப்பதியிலுள்ளவர்க ளடங்கத் திருமாளிகையிலே அமுது செய்தருளினபின்பு பெருஙகூட்டமாக எழுந்தருளி யிருந்து, எனறையும்போலே திருநெடுநதாணடகத்திறகு அர்ததம் அருளிச்செய்யா நிறகச்செய்தே "அலமபுரிநத நெடுந்தடகைக" எனகிற பாட்டுககு அர்த்தமருளிச செய் கிறபோது, "அஞ்சிறைப்புள் தனிபபாகன" என்கிற விடத்திலே "பறவையேறு பரமபுருடா நீ யென்னைக்கைக கொண்டபின, பிறவி யென்னுங் கடலும் வறறிப் பெரும் பதமாகினறதால" எனறு இத்தை இரட்டித்து அநுஸநதித் தருளித் திருககண்களை மலரவிழித்துத் திருமேனியைச் சிலிர்பபித்துப் புன்முறுவல் செய்து திருமுடியிலே அஞ்சலி செய்துகொண்டு அணையிலே சாய்ந்து நிற்கசசெய்தே ஶிர· கபாலம வெடித்துத் திருநாட்டுக் கெழுந்தருள, முதலிகளும் உள்ளேசென்று 'பட்டர் இளைத்து எழுந்தருளியிருககிறார்' என்று ஆண்டாளுக்கு அறிவிகக, ஆண்டாளும் சடககென எழுந்தருளி பட்டரை வாரியெடுத்து மாாபிலே அணைததுக் கொண்டு, திருநாட்டுக்கு எழுந்தருளின விஸ்மயத்தைக கண்டு, திருவுள்ளங் கலஙகுதல திருமுகங்கனறுதல * கண்ணீர்மலகுதல செய்யாதே வண்டுகள் பூவின்பரிமள மறிந்து ஆக்₄ராணித்து க்₃ரஹிக்குமாபோலே, பட்டருடைய ஸௌகுமார்யமறிந்து நலக்காமல இவர் ஹ்ருதகமலத்தை அலர்த்தித் தான் * தெய்வவண்டான தன்மை தோன்ற

ஸ்ரீவைகுண்டநாதன் இவரைக் கைக்கொண்டருளுவதே! பெருமாளுக்கும் நாச்சிமாருக்கும் பேரிழவும்பெருங்கலேசமும் பெருவயிறெறிச்சலுமாய்ச் செல்லாநிற்க, பரமபதநிலய னுக்கும் அங்குள்ள நாச்சிமாருக்கும் பெருவாழ்வும் பெருஞ் செல்வமும், பெருங்களிப்புமாய்ச் செல்லுகிறதே!' என்று புத்ர சோகலேசஸ்பர்சமுமற்று, 'உடையவன் உடைமை யைக் கைக்கொண்டால், நாம் வெறுக்கலாமோ? என்று ஆண்டாள் இருக்க, கடல் கலங்கினபோலே கோயிலுள்ளா ரடங்க சோகார்த்தராய்க் கிடந்து துடிக்க, வேதாந்திகளும் வேரற்றமரம்போலே கோ₄ஷித்துக்கொண்டு விழுந்து சோகார்த்தராய் ப₃ஹுவாய் ப்ரலாபித்து * மழைக் கண்ணீர் மல்கி நிற்க, பெருமாளும் நாச்சிமாரும் திரு முத்தின்பணி காளாஞ்சி திருவெண்சாமரம் திருவால வட்டம் திருவெண்கொற்றக்குடை வெண்முத்தினக்லசம் மேற்கட்டு முத்துத்தாமம் தொடக்கமான தம்முடைய ஸர்வபரிஜநபரிச்சதங்களடங்கக் கொடுத்துவிட்டு, 'நம்மு டைய அவப்₄ருதே₂ாத்ஸவம் கொண்டாடுமாபோலே பட்ட ருக்கும் அவப்₄ருதே₂ாத்ஸவங்கொண்டாடுங்கோள்' என்று திருவுள்ளமாய், திருமுகங்கனறித் திருமுத்துதிர்த்துப் பெரு மாளும் நாச்சிமாருமகூடத் திருமஞ்சநமாடியருளி, 'இப் போது நமக்குச் செவ்வாய் வகரமாய்த்து' என்று திரு வுள்ளம் நொந்து, நாம் புத்ரனை யிழந்தோமே! என்று சுருளமுதும் அமுதுசெய்யாமல் முசித்து எழுந்தருளியிருக்க,

வேதாந்தி முதலான முதலிகள் சீராமப்பிள்ளையைக் கொண்டு பட்டரை ப₃ரஹ்மமேத₄த்தாலேஸம்ஸ்கரிப்பித்துப் பள்ளிப்படுத்து, அவப்ருதங்கொண்டாடி மீண்டுவரும்போது, நஞ்சீயர் முட்டாக்கிட்டு மூடிக்கொண்டு புழக்கடை வழி யாலே தம்மடமே யெழுந்தருள, ஸ்ரீபாதத்து முதலிகள் 'இதுக்கு அடியென?' என்று விண்ணப்பஞ்செய்ய நஞ் சீயரும் 'புதுக்க அறுத்த விதைவை தெருவிலே வெளிப்பட வருமோ?' என்று அருளிச்செய்தருளினார், அதாவது-

ஸசிஷ்யனான ஸதாசார்யன் இறந்து ப்ராப்யமான ஸமனா யிருக்கை ஸ்வரூபஸித்தியென்று கருத்து.

பின்பு ஆண்டாளும் முதலிகளும் திருமாளிகையிலே புக்கவளவிலே வெறிச்சான திருமாளிகையைக் கண்டு, பட்டர் திருத்தகப்பியாரான சீராமப்பிள்ளை '*நல்லதோர் தாமரைப்பொய்கை நாண்மலர் மேற்பனிசோர, அல்லியும் தாதுமுதிர்ந்திட்டழகழிந்தா லொத்ததாலோ. இல்லம் வெறியோடிற்றாலோ!' என்று பாடிக்கொண்டு விழுந்து பெருமிடறுசெய்து ஆர்த்தராய்க்கூப்பிட்டு சோகிக்க, ஆண்டாளும் அவ்வார்த்தியைக் கண்டு 'இவர் ஆழ்வான திருவயிற்றிலே பிறக்கத்தக்கவரல்லர்' என்று முசித்து முதலிகளைப்பார்த்து அருளிச்செய்து, 'பிள்ளாய்! பட்டர் பெற்ற பேற்றுக்குப் பொறாமல் ஜ்ஞாதித்வங்கொண்டாடு கிறீரோ? நீர் இப்படி செய்கையில் நான் ஒருகைப்புடை யிருக்கிறேன்' என்ன, சீராமப்பிள்ளையும் சோகத்தைவிட்டுத் துணுக்கென எழுந்திருந்து ஆண்டாள் திருவடிகளிலே தண்டன் ஸமர்ப்பித்து, அபசாரப்பட்டேன், பொறுத் தருளவேணும்' என்று க்ஷமைகொண்டு, பட்டருக்குத் தீர்த்ததிருவத்யயனமு செய்தருளி நிறைவேற்றினபின்பு, பெருமாளைத் திருவடிதொழச் சென்றவளவிலே,

பெருமாள் சீராமப்பிள்ளையை அருளப்பாடிட்டருளி, 'பட்டரையிழந்தோம் நாம் ; உமக்கு நாம் இருக்கிறோம், முசியாதே கொள்ளும்' என்று பட்டருடைய வரிசை களடங்கக் கொடுத்தருளி ப்ரஹ்மரதம் பண்ணுவித்துத் திருமாளிகையிலே போகவிட, சீராமப்பிள்ளையும் முசிப் பற்று ஹ்ருஷ்டராயிருந்து தர்சநம் நிர்வஹித்துக்கொண்டு எழுந்தருளியிருந்தார்.

இத்தால், மஞ்சள்நீர் குடிப்பித்துப் பெற்றுவளர்த்த வரே தம் பெருவீடு கொடுக்கும்படியான தன்னேற்றமும்,

அர்த்தத₂ாநுஸந்த₄ான வேளையிலே ஹாரத்த₃ன ஸாக்ஷாத் கரித்து வழிநடத்தும்படியான தன்னேற்றமும், பேறு இழவு இரண்டுக்கும் பெருமாள் தாமாய் அதில் கலக்கமற்ற தன்னேற்றமும், ஆழ்வானகுடல்துடக்குடைய பட்டர்களே யுள்ளதொன்றிறே.

பட்டர்வைபவம் முற்றச்சொல்லி முடியாதிறே. யதா₂மதி யதா₂ஶ்ருதமாகச் சொன்னவித்தனை.

பட்டர் திருநக்ஷத்ரம - வைகாசியில் அநுராத₄ம்.

அவாதனியன - 543. " ஸ்ரீபராஶரப₄ட்டார்யஶ்ஸ்ரீரங்கே₃ஶபுரோஹித | ஸ்ரீவத்ஸாங்கஸுதஶ்ஸ்ரீமாந ஶ்ரேயஸே மே஽ஸ்து பூ₄யஸே ||"

## நஞ்சீயர் நம்பிள்ளை வைபவங்கள்

அநந்தரம் வேதாந்திகளான நஞ்சீயர் பட்டர்நலலருள் கொண்டு திருவாய்மொழிக்கு ஒன்பதினாயிரமாக ஸ்ரீபாஷ்யப்ரக்ரியையாலே ஒரு வ்யாக்யாநம் அருளிச் செய்து முற்றப் பட்டோலைகொண்டு 'இதனை ஒரு ஸமபுடத்திலே நன்றாக எழுதித் தரவல்லாருண்டோ?' என்று தம் ஸ்ரீபாதத்து முதலிகளைக் கேட்க, அவர்களும் 'தென்கரையினின்றும் நம்பூர் வரதராஜரென்பாரொருவர் பலகாலும் இங்கேவருவர், அவர் நன்றாக எழுதுவர்' என்று நஞ்சீயருக்கு விண்ணப்பஞ்செய்ய, சீயரும் வரதராஜரை யழைப்பித்து 'ஒருகரந்தமெழுதிக்காட்டிக் காணீர்' என்ன, வரதராஜரும் எழுதிக்காட்ட, சீயரும் அத்தைத் திருக்கண் சாத்தியருளி 'எழுத்து முத்துப்போலே நன்றாயிருந்தது; ஆகிலும், இது திருவாய்மொழி வ்யாக்யாநமாகையாலே, ஒரு விலக்ஷணரைக்கொண்டு எழுதுவிக்கவேண்டுகையாலே திருவிலச்சினை திருநாமமாத்ரமுண்டான இவரைக்கொண்டு எங்ஙனே எழுதுவிப்பது? விஶேஷஜ்ஞரைக்கொண்டே எழுதுவிக்கவேணுமிறே' என்று ஸந்தேஹிக்க, வரதராஜ

ரும சீயா திருவுள்ளத்தை யறிந்து 'அடியேனையும தேவரீா திருவுள்ளத்துக்கு வரும்படியே திருத்திப் பணிகொள்ள லாகாதோ?' என்ன, அவ்வளவிலே சீயரும் மிகவுந்திருவுள்ள முகந்து அபபோதே வரதராஜரை அங்கிகரித்தருளி, 544. "பஞ்சாஸதராங்க₃ா பஞ்சஸம்ஸகாரயுக்தா· பஞ்சாா்த்த₂ஜ்ஞா. பஞ்சமோபாயநிஷ்ட₂ா | தே வாஞ்நாம பஞ்ச மாஸாஸ்ரமாஞும விஷ்ணோர்ப₄க்தா. பஞ்சகாலபராயணா ||" என்ற ஸலோகத்திற்சொன்ன பரமாநநிஷ்டையெல்லாம பூாணமாமபடி விஶேஷகடாக்ஷஞ் செய்தருளி, பட்டோலை எழுதின ஒன்பதிநாயிரத்தையும முற்ற ஒருரு வரதராஜருக்கு அருளிச்செய்து காட்டியருளி, 'இப்படியேதப்பாமல எழுதித் தாரும்' என்று பட்டோலையை வரதராஜர்கையிலே கொடுத் தருள, அவரும் அத்தை வாங்கிககொண்டு 'அடியேன ஊரிலே போய் எழுதிக்கொண்டு வருகிறேன' என்று விண்ணப்பஞ்செய்ய, சீயரும அப்படியே செய்யும' என்று விட, அநந்தரம வரதராஜர் திருக்காவேரியிலே எழுந் தருளினவளவிலே சிறறிடம நீஞ்சிப்போக வேணடுகை யாலே பட்டோலையைத் திருமுடியிலே கட்டிககொண்டு நீஞ்சிப்போகச்செயதே ஒரலை வநது அடித்து கரந்த₂ம் ஆற்றுக்குளளே விழுநதுபோக, வரதராஜரும் அக்கரை யிலேயேறி 'பட்டோலை போய்விட்டதே! இனிநாம என் செய்யககடவோம்?' என்று விசாரிதது, ஒரு அலேகத்தை யுண்டாக்கிககொண்டு நஞ்சீயாப்ரஸாதித்தருளின அா்த்த மொன்றுந தப்பாமல ஒன்பதிநாயிரமும் நன்றாக எழுதி யருளித தாம தமிழுக்கு மிகவும் உத்தமவிரக ராகையாலே ஒரொருபாட்டுககளிலே 545. "உக்தார்தத விஶதீ₃கார யுக்தார்தத₂ாநதரபே₃ாத₄நம் | மதம விவரணம தத்ர மஹிதா நாம மநீஷிணும ||" என்கிறபடியே உசிதமான ஸ்தலங் களுக்கு ப்ரஸந்ந க₃மபீ₄ரபத₃ங்களாலே அர்தத₂விஶேஷங் களும் எழுதிககொண்டுபோய்ச் சீயா திருக்கையிலேகொடுக்க, சீயரும ஸ்ரீகோஶத்தை அவிழ்த்துப பாாததவளவில, தாம்

அருளிசசெய்த கட்டளையாயிருககசசெய்தேயும ஶப₃த₃ங களுககு மிகவும அநுகுணமாகப பலவிடஙகளிலும அநேக விஶேஷாரததஙகள் எழுதியிருககையாலே அதனைககண்டு மிகவுநதிருவுள்ளமுகநதருளி வரதராஜரைப பாரதது 'இது மிகவும நனறாயிராநினறது, இதென?' என்று கேட்க, அவரும் பயபபட்டு ஒனறும விணணபபஞ்செய்யாதிருகக, சீயரும் 'நீர பயபபடவேணடா; உண்மையைச சொலலும்' என்ன, வரதராஜரும் 'சீயா! திருககாவேரி நீச்சாகையாலே பட்டோலையை அடியேன தலையிலேகட்டிககொண்டு நீஞ்சப் புக்கவாறே, ஒரு அலை வநது அடிக்கையாலே அது ஆறறிலே விழுந்து அமிழநது போயிறறு, இது தேவரீர் ஒருருமுற்ற பரஸாதிததருளின கட்டளையிலே எழுதினேன' எனறு விண்ணப்பஞ்செய்ய, நஞ்சீயரும 'இவருடைய புததி விஶேஷமிருநதபடி எனதான! இவா மஹா ஸமர்த்த₂ராயிருநதார், நனறாக எழுதினா!' எனறு மிகவுந் திருவுள்ள முகநதருளி, வரதராஜரை வாரியெடுதது அணைத்துக் கொணடு 'இவா நம்முடையபிள்ளை; திருககலிகனறிதாஸர்' எனறு திருநாமஞ் சாத்தி, தமமுடைய ஸந்நிதியிலே அரை க்ஷணமும பிரியாமல வைததுககொணடு 'பிள்ளைககு ஸகலாரததங்களையும கரதலாமலகமாமபடி ப்ரஸாதித் தருளினா. அவரும் 'சீயரையலலது *தேவுமறறறியேன' எனறு எழுந்தருளியிருநதார். ஆகையாலே சீயர் நம்முடைய பிள்ளை யெனறு அருளிசசெய்த அன்றுதொடங்கி வரத ராஜருககு 'நமபிள்ளை எனறு திருநாம முண்டாயிறறு.

நம்பிள்ளை நஞ்சீயரை 'இதரோபாயங்களுககு ப்ரமாண மும ப₃ஹுளமாய் அநுஷ்ட₂ாதாககளும் பலராயிருக்க, இதுககு ப்ரமாணமும் சுருஙகி அநுஷ்டாதாககளும் சுருங்கி ருஷிசச₂நதே₃ாதி₄தை₃வதாதி₃களும அநுஸந்தே₄யங்க ளனறியே யிருபபானெனன?' என்று கேட்க, சீயர் அருளிச் செய்தபடி — 'இருவர் கூடி ஓராறறிலே இறங்கிப்போகா நினறால, ஆறறிலமிழந்தவனை அமிழாதவன் கையைப்

பிடிததுக கரையேறறுகைககு ஒரு ப்ரமாணாபேக்ஷை வேணுமோ? பரமாணாபேக்ஷையுணடென்று நினைததிராகி லும 546. 'முமுக்ஷுர்வை ஶரணமஹம பரபத்$_3$யே;" 547. "தஸமாந்நயாஸமேஷாம தபஸாமதிரிக்தமாஹு:' 548 "நயாஸ இதயாஹுர் மநீஷிணோ ப$_3$ரஹமாணம". 549. "நிக்ஷேபாபரபாயாயோ நயாஸ பஞ்சாங்க$_3$ஸமயுத |
ஸநநயாஸஸதயாக$_3$ இதயுக்தஶரணாக$_3$திரிதயபி ||" என்று ஏவமாதி$_3$ ப்ரமாணஙகள் பலவறறையும அருளிச்செய்து பரமாணங்களில குறையிலலை, † (நான இவ்வாததத்தில பரமாணந்தான வேண்டுவதிலலை யென றிருப்பன; அதறகு அடி:—ஒருகுள்ளனும ஒருநெடியனுமாக ஆறறிலே யிழிந தால் குள்ளன அமிழாநினறால நெடியவன கையைப்பிடிக் குமபோது கரையிலேயிருந்து ஒருவன சொலலவேணடுவ திலலையிறே. இவனுடைய த$_4$ர்மிக$_3$ராஹகபரமாணநதானே அமையுமிறே. அவன கையை அவன பிடிக்கைக்கு ஒரு விதி$_4$வேணுமோ? என்று அருளிசசெய்து) ‡ [இனி அதி$_4$ காரி சுருக்கம பாரசகில. லோகததில இருநததே குடி யாக ஸர்வரும ஸமஸாரிகளாயிருக்க. அதில நாலிரண்டு பேர உத்தமாஶரமிகளானால. ஸமஸாரிகளுக்கு ஒரு உத் கர்ஷமும. ஸந்நயாஸிகளுக்கு ஒரு அபகர்ஷமுமுண்டோ? இனி 550. "ஜயோதிஷடோமேந ஸவாகக$_3$காமோ யஜேத" என்று ஸவர்கக$_3$ாநுப$_4$வததுக்கு ஸாத$_4$நத்தை ஶாஸதரம விதி$_4$யா நின்றால, ஒரு ஊரிலே ஒருவனன்றோ யஜிததா னென்று கேட்கிறது, இதுககோ உமககு ஆள்பறறப போகிறது?] 551. "ருஷயாதீ$_3$மஶச கரந்யாஸம அங்க$_3$ நயாஸஞ்ச வர்ஜயேத" என்கையாலே இதுககு ருஷ்யாத்$_3$ய

---

† குண்டலிதம் சில பிரதிகளிலிலலை.

‡ (பா) "பினபு 552. 'ப$_3$ராஹமணோ யஜேத' என்று ஜாதிநிப$_3$நத$_4$னமாக ஶாஸ்தரஙகள சொனனாலும். க்வசித் கோணே யஜ்ஞபபார அலபமாயிறேயிருக்கிறது. ஆகையாலே அதி$_4$காரிகள் சுருஙகியிருக்குஙகாணும்"

பேக்ஷையில்லை, இதில் அர்த்த₂த்துக்குக்கூட்டுவேண்டிவிறே, இதற்குங்கூட்டு வேண்டுவது, இதுவே எனக்குக் கருத்து' என்று திருவுள்ளமாக, பிள்ளையும் கருத்தாரத்த₂ ராயருளினார்.

நம்பிள்ளை, நஞ்சீயரைக்குறித்து 'ஒருவன் தனக்கு ஸ்ரீவைஷ்ணவத்வ முண்டென்று அறியலாவது எவ்வவஸ்தை₂ பிறந்தால?' என்ன, சீயரும அர்ச்சாவதாரத்துக்குப்பரத்வ முண்டென்று அறிந்தவளவிலும ஒரு ஸ்ரீவைஷ்ணவன பக்கல் புத்ரதா₃ராதி₃கள் பக்கலுள்ள ஸ்நேஹத்தளவாகிலும ஸ்நேஹம்பிறந்த வளவிலும, ஒரு ஸ்ரீவைஷ்ணவா கடுத்து வார்த்தையருளிச்செய்தால தன நெஞ்சில சிவிட்குத் தட்டாதே பே₄ாக₃ரூபமாயிருந்தவளவிலும ஸ்ரீவைஷ்ணவதவமுண்டென்று அறியலாம, ஆகையால் அர்ச்சாவதாரே பரத்வபு₃த்₃தி₄யும, ப₄ாக₃வதப்ரேமமும், ததகடி₂நோகதி பே₄ாக₃யதாபு₃த்₃தியு முண்டானபோது ஸ்ரீவைஷ்ணவதவம ஸித்தமெனகிறது.

நம்பிள்ளை நஞ்சீயர் ஸ்ரீபாதத்திலே ஸ்ரீபாஷ்யம் வாசித்தருளா நிற்கச்செய்தே 'திருப்போனகம் சமைந்தது' என்றவாறே, 'சொக்கத்தேவரைத் திருவாராதநம பண்ணும்' என்று அருளிச்செய்ய, நம்பிள்ளையும் 'அடியேன் திருவாராதநக்ரமத்தை யறிந்தேனோ?' என்று விண்ணப்பஞ் செய்ய, சீயரும் 'நானோசால க்ரமம் அறிந்திருக்கிறேனா? த்₃வயத்தில உத்தரவாக்யத்தை அநுஸந்தித்துத் திருவடி விளக்கி அமுது செய்யப்பண்ணமாட்டீரோ?' என்று அருளிச் செய்தார். 'உகந்தருளின இடங்கள் பலவிடமாய்த் திருப் போனகம் படைப்பது ஒன்றிலேயாகில, அமுதுசெய்தருளப் பண்ணும்படி எங்ஙனே?' என்று பிள்ளை நஞ்சீயரைக் கேட்க, சீயரும 'த்₃வயத்தில் பூர்வோத்தரக₂ண்ட₃ங்களிரண்டுக்கும் நடுவே ''ஸர்வமங்க₃ள விக்₃ரஹாய'' என்கிற விசேஷண ஸஹிதமாக உச்சரித்து அமுதுசெய்யப்பண்ணுவது' என்று

அருளிச்செய்தார்! இத்தால், உப₄யக₂ண்ட₃மத்₄யே இத்தை உச்சரிக்க அருளிச்செய்தது - கைங்கர்யவாசகசதுர்த்தி₂யுடன் இச்சதுர்த்தி₂சேர்ந்திருக்கைக்காகவும், உப₄யநாராயணபத₃ ஸித₃த₄விக₃ரஹ ஸமாபபகமாகைக்காகவும் அநநயடரயோஜ நத்வ த₃யோதநார்த்த₂மாகவுமிறே, இததால நம பூர்வா சார்யாகள் த்₃வயமொழிநத மநதரஙகொணடு திருவடி விளக்கார்களென்று கருதது.

நஞ்சீயரை நமபிள்ளை 'அவதாரஙகள் ஏதுககாக?' எனறு கேடக, சீயரும் 'ஓரோரவதாரஙகளால் பண்ணின ஆனைத்தொழிலகளெலலாம பாகவதாபசாரம பண்ணின வனை அந்தபபலததை அநுபவிபபிக்கைக்காக' என்று அருளிசசெய்தார். பிள்ளையும் 'ப₄ாக₃வதாபசாரநதான் எது?' என்று விணணப்பஞ்செய்ய, சீயரும 'ஸ்ரீவைஷ்ண வர்களைக கணடககால தஙகளோபாதி பரகருதிமான்களாக நினைத்திருக்கும் புலவிமை, எஙஙனேயெனனில -ஸ்ரீவைஷ்ண வர்கள் "திருவுடை மனனா," "செழுமாமணிகள்," "நிலத தேவர்," "பெருமககள்," "தெள்ளியார" "பெருந்தவததர்," "உருவுடையார் இளையார்கள் நலலார்," "வேதமவலலார," "செய்தவேள்வியர்," "தக்கா மிககார்," "வேதவிமலர்," "சிறுமாமனிசர்," "எமபிரானதனசினனங்கள்," "பேராளன் பேரோதுமபெரியோர்" எனறு இப்படி பலபடியாக மிக வும் விருமபி, நம்குலநாத₂ராய * மயர்வற மதிநலமருளப் பெற்ற ஆழவார்கள் பஹுமதிபண்ணித திருநாமங்கள் சாத்தி வாய்புலத்தி யருளிச் செய்கையாலே, ஸ்ரீவைஷ்ண வர்களைத் தங்களோடொத்த ப்ரக்ருதிமானகளென்று நினைத் திருக்கை நேரே ப₄ாக₃வதாபசாரமெனறு அருளிச் செய்தார். ஆகையால, ஆழவாாகளுமுட்பட "கடலமலலைத் தலைசயனத்துறைவாரைக், கொணடாடும் நெஞ்சுடை யாரவ ரெஙகள் குலதெய்வமே" என்று பஹுமதிபண்ணி விரும்பும் ஸ்ரீவைஷ்ணவ விஷயத்தில ஸவஸாம்யபுததியே அநர்த்த₂ஹேதுவிறே.

நஞ்சீயர் நம்பிள்ளையைக்குறித்து. 'ப$_4$க$_3$வத$_4$நுப$_4$வம் பண்ணுமவனுக்கு விஷயாநுப$_4$வத்தில் அந்வயமில்லை, இவ் வர்த்த$_2$த்தை ஆழ்வார்கள் பலவிடங்களிலும் அருளிச்செய் தார்களிறே எங்ஙனேயென்னில் — * வாசுதேவன் வலை யுள்கப்படுதல் - * மாதரார்கயற்கண்ணென்னும் வலையுட்படு தல், * மதுரக்கொழுஞ்சாறுகொண்ட சுந்தரத்தோளிலே யகப்படுதல் - * சாந்தேந்து மென்முலையார் தடந்தோளிலே யகப்படுதல்; * வானவர்க்கு வன்துணையான அரங்கத்துறை யும் இன்துணைவனைத் துணையென்றிருத்தல் - * ஆவியே யமுதே யென நினைந்துருகி யவரவர்பணைமுலை துணை யென்றிருத்தல்· * அப்பொழுதைக்கப்பொழுது என்னாரா வமுதத்தைப் பாநம்பண்ணுதல் - * பாவையர்வாயமுதத்தைப் பாநம்பண்ணுதல், * நான்குவேதப்பயனைப் பேணுதல் * மாதரார் வனமுலைப்பயனே பேணுதல்; ஒன்றில் இது வாதல், ஒன்றில் அதுவாதலென்று ஏவமாதிகளாலே பஹு முகமாக அருளிச்செய்தார்களிறே. ஆகையாலே, "அன்ன மென்னடையினார்கலவியை யருவருத்தஞ்சினேயேல்" என் றும், "முந்துறவுரைக்கேன் விரைக்குழல்மடவார்கலவியை விடு" என்றும் ஸ்ரீபரகாலரான திருமங்கையாழ்வார் பரத$_2$ மம் விஷயருசியைக் காறியுமிழ்ந்தே ப$_4$க$_3$வத்ஸமாஶ்ரயணம் பண்ணவேணுமென்று நிஷ்கர்ஷித்து அருளிச்செய்தருளுகை யாலே க்ஷுத்$_3$ரவிஷயத்தை ஸ்வாஸநமாகப் பரித்யஜித்தே ப்ராப்த விஷயத்தைப் பற்றவேணும்' என்று அருளிச் செய்தார். பிள்ளையும் க்ருதார்த்த$_2$ராய் நஞ்சீயரை அரை க்ஷணமும் * பிரியாவடிமை செய்துகொண்டு வாழ்ந்தருளுங் காலத்திலே, நஞ்சீயர் நூற்று திருவாய்மொழிக்கு ஆத்தம நிர்வஹித்தருளுகையாலே, பிள்ளை சீயருக்கு ஶதாபி$_4$ஷேகம் பண்ணியருளினாரென்று ப்ரஸித்தமிறே.

நஞ்சீயர் பக்கலிலும் நம்பிள்ளை பக்கலிலே ஸார்வார்த் தங்களும் வந்துகுடிபுகுருகையாலே பிள்ளையும் தீ$_3$பாத்$_3$ப்பந்ந ப்ரதீ$_3$பம்போலே தாஶநம் நிர்வஹிக்க, கண்டு

சியரும் கருதக்ருத்யராயிருக்குங் காலததிலே, நம்பிள்ளை ஸ்ரீபாதததிலே பெரியவாச்சான்பிள்ளை, வடக்குத்திருவீதிப் பிள்ளை, பினபழகிய பெருமாள் சியா, ஈயுண்ணிமாதவப் பெருமாள் முதலான அநேக ஸ்ரீவைஷ்ணவர்கள் ஆமுர யித்து க்ருதார்த்த₂ராயிருநதாாகள்.

இவர்களிலே பினபழகியபெருமாள்சீயர் ஊனறுமுறககமுமினறியே பிள்ளை திருவடிகளிலே * வழுவிலாவடிமை செய்துகொணடு வாழநதருளுங்காலத்திலே, ஒருகால திருமேனிபாஙகினறியே கண்வளாநதருளுகிறபோது, தமககு அந்தரஙகரான ஸ்ரீவைஷ்ணவாகளை அழைத்து 'அடியேன இபபோது திருவடிசாராமல இஙகே இனனம சிறிது நாளிருககும்படி பெருமாள்ஸந்நிதியிலே சென்று ஏழையேதலனும் ஆழியெழசசங்கும் விணணபபஞ்செய்து பரடத்திபணணி வேண்டிகககொள்ளுஙகோள' எனன, அவர்களும அபபடியே செய்துநிறக, சியருககுத திருமேனி பணடுபோலே பாங்காயிறறு.

இததைக கேட்ட ஸ்ரீவைஷ்ணவர்கள், நமபிள்ளை ஸந்நிதியிலே சென்று தணடன்ஸமாபபித்து, 'ஜ்ஞாந வ்ருத்₃த₄ருமாய் வ்யாவ்ருத்₃த₄ருமாயிருககும பின்பழகிய பெருமாள்சீயர் இபபடிச்செய்தார்; இது இவர் ஸ்வரூபததுககுச் சேருமோ?' என்று விண்ணபபஞ்செய்ய, பிள்ளையும் 'அவருடைய அபிபராய மறிகிலோம, ஸகலஶாஸ்தரங்களும் போருவது பிள்ளையெங்களாழ்வானுககாய்தது; அவாபககல சென்று கேளுங்கோள்' எனன, ஸ்ரீவைஷ்ணவாகளும் எஙகளாழவானைக கேட்க, அவரும் 'ஸ்ரீரஙகை₃ஶ்வர்யததில ஸஙக₃ம்போலே காணும' எனன, பிள்ளையும் இததைக்கேட்டு அழகிது! திருநாராயணபுரத்தரையரைச் சென்று கேளுஙகோள்' என்ன, அவர்களும அவரைக் கிட்டிக கேடடவிடததில, அவரும் 'இங்குத துவககின கைங்கர்யம தலைககாட்டாமையாலே காணும்' எனன,

பிள்ளை இத்தையுங்கேட்டு 'ஆகிறது' அம்மங்கியம்மாளைக கேளுஙகோள' எனன, அவருமம 'பிள்ளைகோஷ்டியிலிருந்து பகவத்விஷயங் கேட்கிறவாகளுக்கும ஒருதேசவிசேஷம ருசிக்குமோ?' என்ன, இதனையும பிள்ளை கேட்டு 'நலலது!' எனறு விட்டு 'அமமஙகிய பெரியமுதலியாரைக் கேளுங கோள்' எனன, அவரும 'நமபெருமாள் சிவநததிருமுக மண்டலமும கஸ்தூரித்திருநாமமும் பரமபததநிலே கண்டிலேனாகில் ஒருமூலையடியே முறித்துக்கொண்டு மீண்டு வருவேனென றனறோ படடர் அருளிச்செய்தது, அபபடியே இவரும் நமபெருமாள சிவந்த திருமுகமணடலததையும திருநுதலில கஸ்தூரித்திருநாமத்தையும விட்டுப்போக மாட்டாராகவேணும' எனறா, பிள்ளை, இவறறை யெல்லாம் திருவுள்ளமபறறியருளி, சீயர் திருமுகமணட லததைப்பார்ததுச் சிரிதது 'இவை உமமுடைய நினைவுககு ஒககுமோ?' என்ன, 'இவை இததனையுமனறு' எனறு விண்ணபபஞ்செய்ய, 'ஆகில, உம்முடைய அபிபராயததை நாம அறிந்தோம்' எனறு பிளளை அருளிச்செய்ய, சீயா 'தேவரீா ஸாவஜ்ஞராகையாலே, அறிநதருளாததிலலை, அடியேனைககொணடு வெளியிடத்திருவுள்ளமாகில விண்ணப் பஞ்செய்கிறேன. திருமஞ்சனச்சாலைககு எழுநதருளி, தேவரீர் திருமஞ்சனமுறைகளிலே திருமஞ்சனங்கொண்ட ருளித தூயவுடையாடை திருவுததரீயஞ் சாத்தியருளி உலாவியருளுமபோது குறுவேர்ப்போடே கூடின திருமுக மண்டலச்செவவியையும், அடியேன் சுறறிச் சுழறறிப்பரி மாறுகிற கைங்காயததையும விட்டு அடியேனுககுப பரம பதத்துககுப்போக இசசையாயிருந்ததிலலை, பெருமுகேசால ஸாஸமும இனனம சிறிதுகாலம இங்கேயிருந்து பெற வேணுமென்று நினைத்துச் செய்தேன்' என்று விணணப் பஞ்செய்தாா. இதனைககேட்டருளிப பிள்ளையும முதலி களும் 'இவ்வுடமபோடே இவ்வைபவர்யம் கூடுவதே!' எனறு மிகவுந திருவுள்ள முகந்தருளினார்கள்.

ஒருநாள் நம்பிள்ளை பகவத்விஷயம் அருளிச்செய்து கோஷ்டி கலைந்தவளவிலே, பின்பழகியபெருமாளசியர். பிள்ளை திருவடிகளிலே தண்டன் ஸமர்ப்பித்து 'இவ்வாத்மாவுக்கு ஸ்வரூபோபாய புருஷார்த்தங்களிவையென்று அருளிச்செய்யவேணும்' என்று விண்ணப்பஞ்செய்ய பிள்ளையும் 'இச்சை₂ ஸ்வரூபம், இரக்கமே உபாயம், இனிமை உபேயம்' என்று அருளிச்செய்ய, 'அப்படியன்று அடியேன் நினைத்திருப்பது' என்று விண்ணப்பஞ்செய்ய, பிள்ளையும் 'ஆகில், உமக்கென்று சிலபிள்ளைக்கிணறுகளுண்டோ? நீர் எங்ஙனே நினைத்திருப்பது? அதைச் சொல்லிக்காணீர் என்ன 'தேவரீர் திருவடிகளே தஞ்சமென்று நினைத்திருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அடிமையாயிருக்கையே அடியேனுக்கு ஸ்வரூபம், அவர்களுடைய அபிமானமே அடியேனுக்கு உபாயம், அவர்களுக்கு முகமலர்த்தியே அடியேனுக்கு உபேயமென்று நினைத்திருப்பன்' என்று விண்ணப்பஞ்செய்ய, சீயரையும் பிள்ளை போரப்பரியப்பட்டருளினார்.

ஒருகால் பிள்ளை பகவத்விஷயம் அருளிச்செய்து கோஷ்டி கலைந்து போகாநிற்கச்செய்தே ஸ்ரீவைஷ்ணவனுயிருப்பானொரு ராஜா, வருகிற பெருந்திரளைக்கண்டு 'நம்பெருமாள் திருவோலக்கம் கலைந்ததோ? நம்பிள்ளை கோஷ்டி கலைந்ததோ? என்று கேட்டானென்பர்கள். இப்படி மஹாஸம்ருத்த₃த₄மான ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயோடே நம்பிள்ளை வாழ்ந்தருளுங்காலத்திலே, முதலியாண்டான் திருப்பேரனாராய், கந்தாடையாண்டான் குமாரரான கந்தாடைத் தோழப்பர், நம்பிள்ளையுடைய பெருமதிப்பையும் வைப₄வத்தையுங் கண்டு அஸூயாளுவாய்ப் பொறுக்கமாட்டாமலிருக்குமவர். ஒருநாள் பெருமாள் ஸந்நிதியிலே பெருமாளை ஸேவித்துக் கொண்டிருக்கிறவளவிலே, பிள்ளையும் முதலிகளும் பெருந்திரளாகப் பெருமாளை ஸேவிக்கவென்று கோயிலுக்குள்ளே யெழுந்தருள, தோழப்பர் பிள்ளையுடைய பெருமையைக் கண்டு பொறுக்கமாட்டாமற் சீறி ப₄க₃வத்ஸந்நிதி₄யிலே

நம்பிள்ளையை ப₃ஹு"வாகப் பருஷோக்திகளைச்சொல்லி அநேகமாக நிந்திக்க, பிள்ளையும் அத்தைக்கேட்டு நடுங்கிக் கொண்டு பெருமாளை ஸேவித்துப் புறப்பட்டெழுந்தருள, இச்செய்தியை ஜ்ஞாநாதி₄கையாயிருக்கிற தோழப்பர் தேவிகள் கேட்டுப் பெருக்க வ்யாகுலப்பட்டுத் திருமாளிகைக்குள் செய்கிற கைங்கர்யங்களையும் செய்யாமல் விட்டு வெறுத்து எழுந்தருளியிருக்க, அவ்வளவிலே தோழப்பரும் பெருமாளை ஸேவித்து மீண்டு தம்திருமாளிகையிலே எழுந்தருள, தேவிகளும் முன்புபோலே எதிரே புறப்பட்டுவந்து ப்ரீதியுடனே தமக்கு ஒருகைங்கர்யமும் பண்ணுமையாலே, தோழப்பர் தம்தேவியாரைப்பார்த்து 'உன்னை நாம் அங்கீகரித்த அன்று தொடங்கி இன்றளவாக நம்மைக் கண்டால் ஆசார்யபரதிபத்தி பண்ணிக்கொண்டுபோந்தாய்; இன்று உதா₃ஸீநம் பண்ணியிருந்தாய், இதற்கு அடி என்?' என்று கேட்டருள, தேவிகளும் தோழப்பரைக்குறித்து 'வாரீர்! ஆழ்வார்தம்முடைய திருவவதாரமென்னலாம்படி ஒரு அவதாரவிஶேஷமாய்ப் பெருமாளுக்கு ப்ராணஸு₄ஹ்ருமாயிருந்துள்ள நம்பிள்ளையைப் பெருமாள்ஸந்நிதியிலே கூசாமல் அநேகமாகப் பருஷோக்திகளைப்பண்ணி தூஷித்து 'இப்படி செய்தோமே!' என்கிற அநுதாபமுமற்று உஜ்ஜீவிக்கவிருக்கிற உம்மோடு எனக்கு என்ன ஸம்பந்தமுண்டு? நீர் என்னை வெறுத்தீராகில், என்னுடைய மாதாபிதாக்கள் பெற்றுவளர்த்து உம்முடைய கையிலே காட்டித்தந்த இந்த ஶரீரத்தை உமக்குவேண்டினபடி செய்துகொள்ளும் எங்களாசார்யர் என் ஆத்மாவை அடியிலே அங்கீகரித்தருளினவன்றோ நான் உஜ்ஜீவித்தேன்; ஆனபின்பு 552. "பத்₃மகோடிஶதேநாபி ந க்ஷமாமி கதா₃சந" என்று பாகவதநிந்தனை பண்ணினவர்களை ஒருகாலும் க்ஷமிப்பதில்லையென்று பெருமாள் தாமே அருளிச்செய்த திருமுகப்பாசுரமறிந்தும் அறியாதவர்போலே யிருக்கிற உம்மோடு எனக்கு ஸஹவாஸங்கூடாது; ஆகையாலே, நிலம்பிளந்தால் இழையிட வொண்ணுதாப்போலவும், கடலுடைந்தால் கட்ட

வொண்ணுதாப்போலவும், மலைமுறிந்தால தாங்கவொண்ணு தாப்போலவும அநுதாபம் பிறவாத பூ₄ாக₃வதாபசாரம தீர்ததுககொளளக கூடாதிறே, ஆன பின பு நான என னிஷடததிலேயிருந்து ஈடேறிபபோகிறேன' என்ன, தோழபபரும தேவிகள சொனன வார்ததைகளைக கேட்டுச் சற்றுபபோது திகைத்து எழுநதருளியிருந்து, பெரிய விதவாநுகையாலும திருவம்ஶபரபூ₄ாவத்தாலும அஸூயை யால வந்த திருவுள்ளததின் கலககநதீாநது தெளிந்து வநது தேவிகளைபபாாதது 'நீ சொனனதெலலாம ஒக்கும, நாம தபபுசசெய்தோம்; இனிமேல செய்ய அடுககுமதெது?' என்ன, தேவிகளும் 'ஆறறிலே கெடுததுக குளததிலே தேடாதே, கெடுதத விடததே தேடிககொள்ளீர' எனன, தோழபபரும் 'ஆவதென?' எனன, தேவிகளும 'பரம த₃யாளுவான நமபிள்ளைதிருவடிகளிலே சென்று ஸேவிதது அபராத₄க்ஷாமணம் பணணிககொண்டு அவர் கருபை பண்ணியருள ஈடேறீர்' எனன, தோழப்பரும 'அவரைப பெருமாளுடைய பெருந்திருவோலகககத்திலே பரிபூ₄விதது, இபபோது அவாஸந்நிதியிலே போய்நிற்கவெனறால எனக்கு லஜ்ஜாபூ₄யங்கள் அநுவர்த்தியாநினறது; நீ கூடவந்து க்ஷமிப்பிககவேணும்' என்ன, தேவிகளும் தோழப்பர் சொலலும் வார்ததையைக கேட்டு 'அப்படியே செய்கிறேன்' என்று கடுக வெழுந்திருந்து அவரையுங் கூட்டிக்கொண்டு நம்பிள்ளை திருமாளிகைககு எழுந்தருளுவதாகப் புறப் பட்டவளவிலே,

நம்பிள்ளை செய்தபடி:— கோயிலும எழுந்தருளின பின்பு முதலிகளெலலாரையும் அனுபபியருளி, பகலெலலாம அமுதுசெய்தருளாமல தம திருமாளிகைக்குள்ளேயெழுந் தருளியிருந்து ஸாயங்காலமானவாறே ஆவஶ்யககர்மத்தைச் செய்தருளி ஒற்றைத்திருபபரியட்டத்துடனே முட்டாக் கிட்டுக்கொண்டு தாம்ஒருவருமே எழுந்தருளிக் கந்தாடைத் தோழப்பர் திருமாளிகைவாசலிலே கைப்புடையிலேவந்து

கண்வளர்ந்தருள, தோழப்பரும் தேவிகளுமாகத் திரு விளக்கையேற்றிக்கொண்டு பிள்ளைதிருமாளிகைக்கு எழுந் தருளுவதாகத் திருமாளிகைவாசலிலே புறப்பட்டவளவிலே திருவிளக்கொளியாலே கைப்புடையிலே ஒருவெள்ளைகிடக் கிறதைக் கண்டு. தோழப்பர் 'இங்கு ஆர் கிடக்கிறார்?' என்றுகேட்க. பிள்ளையும் 'அடியேன் திருக்கலிகன்றி தாஸன்' என்ன. அவ்வளவிலே, தோழப்பர் 'இதென்!' என்று திகைத்து, பிள்ளையைப் பார்த்து 'நாம் மஹா தேஜஸ்வீ, நம்மை நம்பெருமாள் திருவோலக்கத்திலே பரிப₄விக்கலாவதென்? என்கிற கோபாபிப்ராயத்தாலே நம் முடைய வாசலிலே வந்து மௌநக்₃யம்செய்வதாகக் கிடக் கிறீரோ?' என்ன, நம்பிள்ளையும் தோழப்பரைக்குறித்து 'அடியேன் அப்படிசெய்ய வரவில்லை' என்ன, 'ஆகில, இங்கு வந்து கிடப்பானென்? என்று தோழப்பர் கேட்க. பிள்ளை அருளிச்செய்தபடி —'பெரியபெருமாள் ஸந்நிதியிலே முதலியாண்டானான திருப்பேரனாரான தேவரீர் திருவுள்ளங் கலங்கும்படி வார்த்தித்த மஹாபாபியான அடியேனுக்கு தேவரீர் திருமாளிகைவாசலல்லது புகுவாசல் மாண்டு வந்து கிடக்கிறேன்' என்ன,

இவரை அநுவர்த்திப்பதாகப் புறப்பட்டுவந்து நிற்கிற தோழப்பர் பிள்ளை கண்வளர்ந்தருளுகிற கைங்₃யத்தைக் கண்டு, அவருடைய நைச்ய வார்த்தைகளையும் கேட்டு 'இதொரு அதி₄கார மிருந்தபடியென!' என்று போர வித₃த₄ராய்ப் பிள்ளையை வாரியெடுத்து அணைத்துக்கொண்டு இத்தனைநாளும் சிறிதுபேருக்கு ஆசார்யரென்றிருந்தேன், இப்போது லோகத்துக்கெல்லாம் நீரே ஆசார்யராகைக்கு ப்ராப்தரென்று அறிந்தேன்' என்று தோழப்பர் உகந்து 'லோகாசார்யர்' என்று பிள்ளைக்குத் திருநாமஞ்சாத்தி யருளித் தம்முடைய திருமாளிகையிற்கொண்டு புகுக்த் தாமும் தேவிகளுமாகப் பிள்ளையை அநேகமாக அநுவர்த் தித்து அவர்திருவுள்ளத்தை மிகவும் உகப்பித்து, தமக்கு

வேண்டும அர்த்த₂விஶேஷங்களெல்லாங் கேட்டுக்கொண்டு பிள்ளை திருவடிகளிலே பரவணராய் க்ருதார்த்த₂ரா யருளினா.

இப்படி நம்பிள்ளை மஹாவைப₄வமுடையராய் வாழ்ந் தருளுமது கண்டு நஞ்சீயா செய்தத்துவாய்த்து ஸ்ரீமானும் நூறு திருநக்ஷத்ரம எழுந்தருளியிருந்து அந்திமதஶையிலே திருமேனியிலே நோவுசாத்திக் கணவளாந்தருள, சீயா ஶிஷ்யரான குட்டிக்குறியிளையாழ்வாா சீயரைப் பார்த்து 'த₃வயத்தை அநுஸந்தித்தாலாகாதோ? என்ன, நஞ்சீய ரான பெரியசீயா அவரைக்குறித்து 'அது என்? உனக்கு வேண்டாதே எனக்கு இப்போதாக வேண்டுகிற தென்? நடையாடித்திரிவார்க்குவேண்டாதே,கிடக்கைப்பட்டார்க்கு வேண்டியோ த₃வயமிருப்பது?' என்ன, அவரும் நிருத்தர ராய லஜ்ஜிதரானாரிறே, இந்தால, ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு த₃வயம ஸதா₃நுஸந்தே₄ய மென்றபடி.

இத்தைக் கேட்டுத் தெற்காழ்வார்பட்டர், சீயா ஸ்ரீபாதத்திலே சென்று ஸேவித்து 'உமக்குச் செய்ய வேண்டுவதென?' என்று கேட்டருள, சீயரும் 'பெரிய பெருமாள் ஸர்வஸவத₃ாநம்பண்ண அநுப₄விக்க வேண்டி யிராநின்றது' என்று விண்ணப்பஞ்செய்ய, தெற்காழ்வாா பட்டரும இத்தைத் திருமாலை தந்தபெருமாளுக்கு அறி விக்க, அவரும் இத்தைப் பெருமாளுக்கு விண்ணப்பஞ் செய்ய, பெருமாளும் புறப்பட்டருளி மடத்துவாசலிலே சென்று சேலையைக்களைந்து சீயரை அநுபவிப்பித்தருள, சீயரும் அநுபவித்து ஹ்ருஷ்டராய்ப்பிள்ளை தொடக்கமான முதலிகளைக்குறித்து 'பெருமாள் எனக்கு ஸர்வஸவத₃ாநம பண்ணியருளினார்; நாம் உங்களுக்கு ஸாவஸவத₃ாநம பண்ணுவதாக ஒருப்பட்டோம, அபேக்ஷையுடையாா உடையபடியே அபேக்ஷித்துக்கொள்ளுங்கோள்' என்று அருளிச்செய்ய, பிள்ளையும 'அடியேனுக்குத் தஞ்சமாயிருப்ப

தொரு வார்த்தை அருளிச்செய்யவேணும்' என்று விண்ணப் பஞ்செய்ய, சீயரும 'மணககோலததிலே முள்ளேத தெளிப் பாரைப்போலே இபபோது தஞ்சமாகக் கேட்பது ஒருவாரத தையுண்டோ ?' எனறு பிள்ளைக்கு அருளிசசெயத வார்த்தை;— 'ஆத்மவிநியோகமும ஈஶ்வர னெனறிராதே, ஈஶ்வரவிநியோகமும ஆதமா எனறிரும' எனறு அருளிச் செய்ய, அதில பிள்ளை திருவுளளம பரஸநநமாகாமையாலே பேசாதே நிறக, சீயரும 'உமமுடைய நினைவு எது? சொலலிககாணீர்' எனன, பிள்ளையும் 'ஒரு ஸ்ரீவைஷ்ண வா பரமபதத்திறகு எழுந்தருளினல் இங்கு இருககும ஸ்ரீவைஷ்ணவர்கள் என்ன நினைததிருககக்கடவா?' எனன, சீயரும் 'அது அதிகாரா நுகுணமாகவனறோ இருப்பது? த்ருப்தனுகில ஆரதத ஞகிறன, ஆர்ததனுகில த்ருபதனு கிறன்' எனறு அருளிச்செய்தருளி, பினனையும் பிளளையைக குறிதது 'ஜ்ஞாநகார்யத்தில உமககுக கர்த்தவ்யமிலலை, பெருமாளுக்கு உகப்பாக முதலிகளையுங் கூட்டிக்கொணடு தர்ஶநார்த்தம் நிவாஹித்துப் போரீர என்று அருளிச்செய்து, 'வாரீர பிள்ளாய்! படடர் அடியேனுககு ஹிதோபதேஶஞ் செய்து 'வேதாந்தியென்கிற பேரையுடையோம, நம்பககல் ஆஶ்ரயித்தோம், பஹுதரலயததை ஆசார்யதக்ஷிணையாகக் கொடுததோம்' எனறு இறுமாந்திராதே எம்பெருமானர் திருவடிகளே தஞ்சமெனறிரும்' என்று அருளிசசெய்தார்; நீரும் அபபடியே 'லோகாசாாயரெனகிற பேரை யுடை யோம், அருளிச்செயலநாலாயிரததிறகும் பொருள்சொலல வலலோம, ஸ்ரீபாஷ்யததிறகும பரவர்த்தகர்' எனறு மேனமையை நினைந்திராதே எமபெருமானர் திருவடிகளே தஞ்சமெனறிரும்' எனறு அருளிசசெய்து, பிள்ளை முதலான முதலிகளை க்ஷமைகொணடு தீரததங்கொண்டு அமுது செய்தருளப்பண்ணி, கோயிலுக்கு நேரே பகவதஸேநாபதி சீயர் மடியிலே திருமுடியும், பினபழகியபெருமாள் சீயர் மடியிலே திருவடிகளுமாகக் கண்வளாந்தருளி, படடர்

திருவடிகளைத்யாகிததுககொண்டு திருநாட்டுககு எழுந் தருளினா. பிளளையும. ஆசாாயவிஶலேஷத்தை ஸ்ஹிகக மாட்டாதே * மல்குநீாககண்ணோடு மையலுறறு கலேஶித் தருள, முதலிகளும தேவரீா இஙஙனே ஶோகிககககூடுமோ? எனன. பிளளையும தமமிலே தேறினறு. பெருமாள் சாததிககளைந்துவரவிட்டருளின திருமாலையையும திருபபரி யட்டஙகளையும கொண்டு கோயிலனைததுக கொததும வந்து ஸேவிகக.யதிஸமஸகாரவிதி₄யாலப₃ரஹ்மமேத₄விதி₄யடஙகச செய்து சீயரை அதிஸம்ப₄ரமத்துடனே ஸம்ஸகரித்துக கூஙிததுப பளளிபடுத்தருளி. பினபுண்டான க்ருத்யஙகளை யெலலாஞ்செய்து சீயருககுச் சீர்மையுடன திருவத்யயநமும நடததியருளினாகள்.

அந்திமதஶையில ஈஶ்வரனதானே விஷயீகரிததெழுந தருளி ஸாவஸவத₃ாநமபண்ணபபெறற தனனேறறமும. நூறுரு திருவாயமொழிககு ஆததமருளிசசெயது நிாவ ஹிததருளி ஶதாபி₄ஷேகம பண்ணபபெறற தன்னேறற மும். ஆசாாயாநுவாததநபரதிபந்த₄கஙகளான களதர புதர க்ஷேதர மிதர தந₄தே₃ஶ வாஸங்களை நேராக நிவாததித்து ஆசாாயன எழுநதருளியிருந்த தே₃ஶமே பரமபராபயமெனறு எழுநதருளி வநது தம் ஸாவஸவததையும் அததலேக்கே ஶேஷமாககித ததகைங்கர்யமே யாதரையாய் அதுவே ஸத தாத₄ாரகமாகப பெற்ற தனனேற்றமும இவரொருவாககுமே யுள்ளதொன றிறே.

நஞசீயா திருநக்ஷத்ரம. பஙகுனியில உததிரம.

அவர் தனியன - 553. "நமோ வேத₃ாநத வேத₃யாய ஜக₃ந்மஙக₃ள ஹேதவே। யஸய வாக₃ம்ருதாஸார பூரிதம பு₄வநதரயம॥ 554. "யத்₃வசஸ ஸகலம் ஶாஸ்த்ரம் யதகரியா வைதி₃கோவிதி₄:। யதகடாக்ஷா ஜக₃த்₃ரக்ஷா தம வந்தே₃ மாத₄வம் முநிம॥"

இதில் பெருமாள் இரங்கின ஸர்வஸ்வதா3நம்-மறைவு அறத்திருமேனி காட்டுகை, நஞ்சீயர் பண்ணின ஸர்வஸ்வதா3நம் - மறைவு அறச் சரமார்த்த2 விஶேஷங்களை வெளியிடுகை. ஆத்மவிநியோகம் ஈஶ்வரனென்றிராமைக்கு அடி, ப2லித்வாபி4மாநித்வமில்லாமை, ஈஶ்வரவிநியோகம் ஆத்மாவென்றிருக்கைக்கு அடி, ப2லியுமாய் அபி4மாநியுமான ஶேஷிக்கு இஷ்டவிநியோகா3ர்ஹனாகை. ஆர்த்தனாகில் த்3ருப்தனாகையாவது-ததீ3யவிஶ்லேஷத்தில் ஶரீரவிஶ்லேஷம் பிறக்கும்படியான பரமார்த்தி விளையில் இப்போதே ஸம்ஶ்லேஷிக்கவன்றோ போகிறோமென்று த்3ருப்தி பிறக்கை; த்3ருப்தனாகில் ஆர்த்தனாகையாவது-ததீ3யரை விஶ்லேஷித்தும் ஶரீரவிஶ்லேஷம்பிறக்கும்படி அதிஶயித்த ஆர்த்தியின்றியே ஸ்வஶரீர விஶ்லேஷத்தளவும் பொறுக்கும்படியான ஆர்த்தி அநுவர்த்திக்க த்3ருப்தியுண்டாய் 'இப்போது உசாத்துணை இழந்தோம்' என்னுமளவேயாகை யென்றபடி.

'பிள்ளையும்; இவ்வார்த்தையைக்கேட்டு அநுஷ்டாநபர்யந்தமாகக் கண்டருளினார், எங்ஙனே யென்னில்—அம்மங்கியம்மாள் பரமபதத்திற்கு எழுந்தருளும்போது பிள்ளை அவர் திருமாளிகையேற எழுந்தருள, அம்மாள் தேவிகள் ப்ரஸந்நையாயிருக்கக் கண்டு, ஸ்ரீபாதத்து முதலிகள் 'இதற்கு அடியென்?' என்று பிள்ளையைக் கேட்க, பிள்ளையும் 'தேவிகள் விஷயத்தில் இதற்குமுன்பு அம்மாள் பண்ணின விரோதமுண்டாகிலிறே அவர்பேற்றுக்கு இவர் வெறுப்பது' என்று அருளினார். தம்முடைய ஸ்ரீபாதத்து முதலிகளில் ஒருவர் திருநாட்டுக்கு எழுந்தருள, தத்3பா4ர்யா புத்ராதி3கள் வந்து தம் ஸ்ரீபாதத்திலே விழுந்து அழ, 'இதற்கு அடி என்?' என்று முதலிகள் கேட்க, பிள்ளையும் 'பெறுகிறதேஶம் கொந்தளிக்கிறபடிகண்டால் இழக்குந்தே3ஶம் எப்பாடுபடக்கடவதோ?' என்று அருளினார், ஆகையால், ஸத்3வஸ்துவை இழந்த தேஶம் கையெடுத்துக் கூப்பிடச் சொல்லவேண்டாவிறே யென்று கருத்து.

நம்பிள்ளையும், ஸ்ரீபாதத்துமுதலிகளும் திருவெள்ளறை நாச்சியாரை ஸேவித்து மீண்டு கோயிலுக்கு எழுந்தருளா நிற்கச்செய்தே, திருக்காவேரி இருகரையும் ஒத்து அதிக$_{3}$ம்பீ$_{4}$ரமாய் நாநாவர்த்தஜ$_{2}$ஷாகுலமாய்த் * தடவரையதிரத் தரணிவிண்டிடியத் தலைப்பறிக்க கரைமரஞ்சாடிக் கடலினைக்கலங்கக் கடுத்திழி க$_{3}$ங்கை$_{3}$போலே புங்க$_{2}$ாநுபுங்க$_{2}$மாக ப்ரவஹியாநிற்க, ஓடம் கிடையாதபடியாலே ஒரு தாழியிலே எழுந்தருள, நட்டாற்றிலே சென்றவாறே போதும் அஸ்தமித்து மழையுமிருட்டுமாய் அக்கரை இக்கரை முன்னடி தெரியாமே திக$_{3}$ப$_{4}$ரமம் பிறந்து தாழி அமிழத் தேட, இந்த அவஸ்தையில் 'நாலிரண்டு பேர் தாழியை விட்டால் கரையிலே யேறலாம், ஒருவரும் விடாதிருக்கில் நம்பிள்ளை முதலாக எல்லாரும் அமிழ்ந்து தட்டுப்பட்டுப்போகிறது' என்று தாழிக்காரன் கூப்பிட, அவ்வளவிலும் நட்டாற்றுகையாலும், ப$_{4}$யாதிஶயத்தாலும் ஒருவரும் அதற்கு இசைந்து விட்டார்களில்லை, அவ்வளவிலே, ஒரு ஸாத்விகையான அம்மையார் தாழிவிடுகிறவனைப் பார்த்து 'நூறுபிராயம் புகுவாய், * உலகங்கட்கெல்லாம் ஒருயிரான நம்பிள்ளையைப் பேணிக்கொண்டு கரையிலே விடு' என்று அவனை ஆசீர்வதித்து அந்த$_{4}$காரத்தையும் பாராமல் ஆற்றிலே விழுந்தாள்; அவ்வளவுகொண்டு தாழி கரையிலே போக, பிள்ளையும் அக்கரையேறி 'ஓர் ஆத்மா தட்டுப்பட்டுப்போச்சுதே!' என்று பலகாலும் அருளிச்செய்து வ்யாகுலசித்தராயிருக்கிறவளவிலே, அப்போது அம்மையார் நாலடிவிட்டுப்போனவளவிலே ஒருதிடர் ஸந்திக்க அதிலே தரித்து நின்று, இராக்குரலாகையாலும் கரை ஆஸந்நமாகையாலும் ஸ்வாசார்யரான நம்பிள்ளை வ்யாகுலப்பட்டு அருளிச்செய்கிற வார்த்தையைக்கேட்டு, 'ஸ்வாமீ! தேவரீர் வ்யாகுலப்பட்டருளவேண்டா, அடியேன் இங்கே இருக்கிறேன்' என்று குரல்காட்ட, பிள்ளையும் 'திடர்கள் மரங்கள் ஸந்தி$_{4}$க்கத்தாக்கக்கூடும் என்று திருவுள்ளம்பற்றித்

தாழிககாரனையிட்டு அவளையும அககரையிலே அழைடபித் துககொள்ள, அவளும் வந்து பிளளை திருவடிகளிலே ஸேவித்து, ஆசார்யனையலலது ரக்ஷகாநதரம அறியாத வளாகையாலே 'அடியாள் ஆற்றிலே ஒழுகிப்போகிற போதும தேவரீா அங்கே ஒருகோரைமேடாய் வந்து ரக்ஷித தருளிறறே!' எனறு கேடக, பிள்ளையும் உம்முடைய விஶவாஸமிதுவானபினபு அதுவும அபபடியாகாதோ?' எனறு அருளினா, இததால, ஸ்வஶரீர அர்த்த₂ப்ராணனகளை அழியமாறியாகிலும் ஆசார்யனைபபேணவேணுமெனனும் நிஷ்டை₂யுண்டாகவே, ஶஶவரன அவனைப பேணி ரக்ஷிககு மெனனுமது சொலலவேண்டாவிறே.

அநந்தரம் பிள்ளையும் முதலிகளுமாகக கோயிலிலே எழுந்தருளியிருந்து தாஶநம நிர்வஹிததுககொண்டு வாழந தருளுகிற காலததிலே, நம்பிள்ளை ஸ்ரீபாததததிலே ஆஶர யிததிருபபாளொரு அம்மையாருககுத் திருமாளிகைக்கு அருகே ஒரு கோல துறை நிவேஶந முண்டாய் அதிலே குடியாயிருககும, அவளுககு ஸப₃ரஹமசாரியாயிருபபாரொரு ஸ்ரீவைஷ்ணவா 'பிள்ளை திருமாளிகை நெருககமாயிருக கிறது, இநத ஒருகோலதுறையை ஆசார்யருககு ஸமர்ப் பியும' எனறு அமமையாருககுப பலகாலும் அருளிச் செய்ய, அவளும 'கோயிலிலே ஒருகோல துறை ஆருககுக கிடைககுமா? நான திருவடிசாருநதளையும கொடேன' எனன, ஸ்ரீவைஷணவரும இந்த விஶேஷததைப பிள்ளைககு விண ணபபஞ்செய்ய பிள்ளையும அம்மையாரை அழைததருளி 'உனககு ஒரு ஶரீரததிறகுச் சறறிடமனறோ வேணடுவது? முதலிகள எழுநதருளியிருகக நெருககமாயிருககிறது, உன ஒருகோல துறையையும் நமககுத் தரவேணும' எனன, அமமையாரும 'அபபடியே செய்கிறேன, தேவரீா பரம பதத்திலே அடியேனுககு ஒரு கோலதுறை தந்தருள வேணும்' எனன, 'அதறகு ஸ்ரீவைகுண்டநாதனனறோ கடவன! அவனுக்கு விண்ணப்பஞ்செய்து கொண்டு தரு

கிறோம்' என்று அருளிச்செய்ய, அவளும் 'அடியேன ஸாது₄; அதிலே பெண்பெணடாட்டி; தருகிறோமென்ற வார்த்தை யால போராது, எழுதி எழுத்திட்டுத் தரவேணும்' என்ன பிள்ளையும 'இப்படியுங்கேட்பதே!' என று திருவுள்ளம் உகந்து 'இனனவருஷம இன னமாஸம இதநனையாந்தேதி இந்த அமமையாருககுத திருககலிகன றி தாஸன பரம பதத்திலே ஒருகோலதுறை எழுதிககொடுதேன; அகி₂ல லோகஸவாமியும அஸமத்ஸவாமியுமான ஸ்ரீவைகுண்ட நாதன கரயஞ் செலுத்திககொடுததருளவேணும' என்று ஶாஸந மெழுதித் த ம மு டை ய திருவெழுதது்சாததிக கொடுததருளினா. அம்மையாரும திருமுகத்தை ஶிரஸா வஹிதது பரீதியுடனே வாங்கிககொணடு தீாததபரஸாத₃ங களும ஸ்வீகரித்து, அன றும் மற்றைநாளும் பிள்ளையை ஸேவிததுககொண்டிருநது, மூனறுமநாள பரமபதததிலே சென றாள்; இததால, 'ஆசார்யன இரங்கி பரஸாதித்த தொனறையே தஞ்சமெனறு இருககவேணும், உப₄ய விபூ₄தியும ஆ சா ர் ய னி ட்ட வழககாயிருககும' என று தோனறுகின றதிறே.

மஹாபாஷ்யபட்டா பிள்ளையை 'சைதந்யவஸ்துவா யிருக்கிற ஆதமாவுககு ஶரீரவிஶ்லேஷம் பிறந்தால பரம பத₃ம ஸித்₃த₄மென்று அறுதியிட்டிருககலாவது எவ்வர்த் ததாலே?' என்று கேட்க, 'ஶ்ரிய பதியை உபாயோபேய மென று அறுதியிட்டிருப்பது, நெடுங்காலம் இழநதுகிடந்த வஸ்துவைக் காட்டித்தந்த ஆசாாயன் பககலிலே க₄நகக விஶ்வாஸமுண்டாயிருப்பது, அருளிச்செய்த ஸ்ரீபாஷ்யத தின்படியே எம்பெருமானுர் த₃ாஶநமே ஸித₃த₄ாநதமெனறி ருப்பது, ஸ்ரீராமயணத்தாலே ப₄க₃வதகு₃ணுநுஸந்த₄ாநம பண்ணுவது, ஆழ்வாாகளருளிச் செயல்களாலே போது போக்குவது, ஶரீர விஶ்லேஷம பிறந்தால ஸநதேஹிகக வேண்டா; * மீட்சியின்றி வைகுந்தமாநகர் மற்றது கைய துவே' என று அருளினர், ஆகையாலே, உபாயோபேய

